# சிறு சேமிப்பும் சிறந்த சேவையும்

பிள்ளைகளுக்கும், உறவினர்களுக்கும், நண்பர்களுக்கும் உதவி புரிதல் நம் கடமையாகிறது. எத்தகைய உதவி தேவை என்பதை அறிந்து நம்மால் இயன்றதைச் செய்யவேண்டும். ஆன்மிகத் துறையில் அவர்களை ஈடுபடுத்துவது தலைசிறந்த உதவியாகும். அவர்கள் பெயரால் ரூ. 100 டிபாஸிட் செய்து மாதந்தோறும் தர்மசக்கர இதழ் அவர்களுக்குப் போய்ச் சேரும்படி செய்யலாம். தாங்கள் டிபாஸிட் செய்யும் தொகை ரூபாய் நூறும் வட்டியில்லாக் கடனாக அவர்களின் சிறு சேமிப்பாக தர்மசக்கரம் ஆபிஸில் இருக்கும். தர்மசக்கரம் மாதந்தோறும் தாங்கள் உதவி செய்ய விரும்புபவர்களுக்குப் போய்ச் சேரும். தாங்கள் செலுத்தும் தொகையைத் தங்களுடைய சிறு சேமிப்பாக வைத்துக்கொள்ள விரும்பினாலும் தங்கள் பெயரால் டிபாஸிட்டாக வைத்துக்கொண்டு தாங்கள் குறிப்பிடுபவர்களுக்கு மாதந்தோறும் பத்திரிகை அனுப்பலாம். தேவையானபொழுது தாங்களே இப் பணத்தைத் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். இத்திட்டம் சிறு சேமிப்பும் சிறந்த சேவையுமாகிறது.

## சந்தா விவரம்

**1. ஆண்டு சந்தா ரூ. 10**

ரூ. 10 செலுத்தியது முதல் அல்லது அடுத்த மாதம் முதல் பன்னிரண்டு மாதங்களுக்கு ஒவ்வொரு தமிழ் மாதமும் முதல் தேதியில் கிடைக்கும்படி பத்திரிகை அனுப்பப்படுகிறது.

**2. சகாய சந்தா ரூ. 5**

தர்ம சக்கரம் அடக்க விலைக்கு வெளியிடப்படுகிறது. ஆண்டு சந்தா ரூபாய் பத்து செலுத்த இயலாதவர்கள் ரூபாய் ஐந்து மட்டும் அனுப்பலாம். பாக்கி ரூபாய் ஐந்தைப் பாண்டிச்சேரி S. விஸ்வநாதன் 'தர்ம சக்கர உதவி நிதி' யினின்று ஈடுசெய்துகொள்கிறோம். தெய்வீக விஷயமாதலால் ரூபாய் பத்து செலுத்த இயலுகிறவர்கள் இந்தச் சலுகையைப் பயன்படுத்த வேண்டாம்.

**3. டிபாஸிட் சந்தா ரூ. 100**

ரூ. 100 அனுப்பி இங்கு டிபாஸிட் செய்துவிட்டால் டிபாஸிட் இங்கு இருக்கும் வரையில் மாதந்தோறும் தர்மசக்கர பத்திரிகை தங்களுக்கு வந்துகொண்டிருக்கும். ஆண்டுதோறும் சந்தா செலுத்தி புதுப்பிக்க வேண்டியதில்லை. பத்திரிகை வேண்டாம் என்று கருதும் பொழுது டிபாஸிட் செய்த ரூபாய் நூறையும் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். இந்தத் திட்டம் உள்நாட்டுக்கு மட்டும் உரியது.

**உள்நாடு தனி இதழ் ரூ. 1-00. வெளி நாடு வருட சந்தா ரூ. 20-00**

# தர்ம சக்கரம்

மாத சஞ்சிகை

| சக்கரம் 27 | பிங்கள ௵ தை ௴ | ஆரம் 1 |
|---|---|---|

## பொருளடக்கம்



## அந்தர்யோக விவரங்கள்

தென்ஆற்காடு ஜில்லா—மணல்மேட்டில் 22—1—78 ஞாயிற்றுக்கிழமை

*இடம்:* ஸ்ரீ ராமகிருஷ்ண தொண்டர் சங்கம் இறைவழிபாட்டுக்கூடம்
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

திருநெல்வேலி ஜில்லா—கோவில்பட்டியில் 22—1—78 ஞாயிற்றுக்கிழமை

*இடம்:* ரயில்வே ஸ்டேஷனுக்கருகிலுள்ள லாயல் மில் ஆரம்பப் பாடசாலை
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்

கன்னியாகுமரி ஜில்லா—நாகர்கோவிலில் 22—1—78 ஞாயிற்றுக்கிழமை

*இடம்:* தேசிய விநாயகர் தேவஸ்தான உயர்நிலைப்பள்ளி
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி பரானந்தர்

[ பின்பக்கம் பார்க்க ]

## அந்தர்யோக விவரங்கள் (தொடர்ச்சி)

**தூத்துக்குடியில் 29—1—78 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* சச்சிதானந்தசபை
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி பரானந்தர்

**வடஆர்காடு ஜில்லா—மேக்களூரில் 4—2—78 சனிக்கிழமை**

*இடம்:* ஸ்ரீ நவநீத கோபாலகிருஷ்ண ஆலயம்
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**கரூரில் 5—2—78 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* பசுபதிபாளையம் விவேகானந்த கல்வி நிலையம்
*நேரம்:* மாலை 5-00 மணிமுதல் 7-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

**வடஆர்காடு ஜில்லா—ஆரணியில் 5—2—78 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* கோட்டை ஸ்ரீ கைலாசநாதர் ஆலயம்
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**மதுரை ஜில்லா—கம்பத்தில் 5—2—78 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* ஸ்ரீ முத்தையா பிள்ளை ஞாபகார்த்த உயர்நிலைப்பள்ளி
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்

**திருநெல்வேலி ஜில்லா—கல்லிடைக்குறிச்சியில் 5—2—78 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* அகஸ்தியர் கோவில்
*நேரம்:* காலை 9-30 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி பரானந்தர்

**ராஜபாளையத்தில் 12—2—78 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* ஸ்ரீ ராமகிருஷ்ண சேவாச்ரமம்
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 5-00 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

---

அந்தர்யோக நடைமுறையில் நாமஜபம், தியானம், உபந்யாசம், மௌனம், ஸத்ஸம்பாஷணை முதலியவை அடங்கும். உபந்யாசங்கள் யோகம், பக்தி, ஞானம் முதலியவைகளைப்பற்றி நடைபெறும். ஸத்ஸம்பாஷணையில் அன்பர்கள் தங்கள் சந்தேகங்களை நீக்கிக்கொள்ளலாம். விருப்பமுள்ள அன்பர்களும் தாய்மார்களும் அந்தர் யோகங்களில் கலந்துகொள்ளலாம். ஆனால் கைக்குழந்தைகளுடன் வரும் தாய்மார்களும் பன்னிரண்டு வயதிற்குக் கீழ்ப்பட்ட சிறுவர்களும் கலந்துகொள்ள அனுமதிக்கப்படமாட்டார்கள்.







# தர்ம சக்கரம்

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.

சக்கரம் 27 | பிங்கள ஹூ தை மீ | ஆரம் 1

## பிரார்த்தனை

ॐ नमः प्रणवार्थाय शुद्धज्ञानैकमूर्तये ।
निर्मलाय प्रशान्ताय दक्षिणामूर्तये नमः ।।

— शंकराचार्यः

ஓம் நம: ப்ரணவார்த்தாய சுத்தஞானைகமூர்தயே ।
நிர்மலாய ப்ரசாந்தாய தக்ஷிணாமூர்தயே நம: ।।

ஓம் நம: என்னும் பிரணவத்தின் மூலம் அடையப்பெறுபவனும் நிறை ஞான மூர்த்தியும், மாசற்றவனும், அமைதியுற்றவனுமாகிய தக்ஷிணாமூர்த்திக்கு வணக்கம்.

பிறப்பிலி பிஞ்ஞகன் பேரருளாளன்
இறப்பிலி யாவர்க்கும் இன்பம் அருளும்
துறப்பிலி தன்னைத் தொழுமின் தொழுதால்
மறப்பிலி மாயா விருத்தமும் ஆமே.

துறப்பிலி — பக்தரைப் புறக்கணியாதவன், மறப்பிலி — பக்தர்களை மறக்காதவன் மாயா விருத்தமும் ஆம் — மயக்கமும் ஒழியும்.

— திருமூலர்

# அருள் விருந்து

பண்பாட்டுக்குத் தடைபோடுவது சுயநலம்.

மனத்தூய்மைக்கேற்பத் தெய்விகம் திகழுகிறது.

முயற்சிகள் யாவுக்கும் புனிதம் தருவது அருள் நாட்டம்.

சத்தியத்தினின்று வழுவுபவன் துயரத்துக்கு ஆளாகிறான்.

அரும்பெரும் செயல் அனைத்துக்கும் ஆதாரமாயிருப்பது அன்பு.

கட்டில் அடங்காத மனதைக் கட்டி ஆளுபவன் பேரின்பம் எய்துகிறான்.

மன்னுயிர் யாவையும் தன்னுயிர் போன்று தாங்குபவன் மேலோன் ஆகிறான்.

தன்னை ஒரு குழந்தையாக வைத்துக்கொண்டு கற்பவனுக்கு ஞானம் வளருகிறது.

குலத்தை முன்னிட்டல்ல, குணத்தை முன்னிட்டே ஒருவன் மேலோனாகிறான்.

உள்ளத்தில் இருப்பதை உள்ளபடி எடுத்து உரைப்பவன் உயர்நிலை எய்துகிறான்.

சேவை பண்ணுவதில் ஆர்வம் படைத்திருப்பவனுக்கு அதை நிறைவேற்ற உபாயங்கள் பல உள.

உயிர்வகைகள் அனைத்தையும் இறைவனோடு இணைப்பவனே நல்வழியில் செல்ல வல்லவனாகிறான்.

தனக்கு எல்லாம் தெரியும் என்னும் செருக்கு உடையவனுக்குத் தத்துவ ஞான வளர்ச்சி இல்லை.

தன்னைப் பாபி என உணருகிறவன் பாபி ஆகிறான், பக்தன் என உணருகிறவன் பக்தனாகிறான்.

பேராசைக்காரன் பாதுகாப்பை நாடுகிறான். ஆசையை அகற்றியவனுக்குப் பாதுகாப்பு ஏதும் தேவை இல்லை.

இன்றைக்குச் செய்யவேண்டியதை இன்றே செய்; நாளைக்குச் செய்யவேண்டியதைப்பற்றி இன்று கவலைப்பட வேண்டாம்.

பரமஹம்சர் புகட்டிய

# பெருநெறி விளக்கம்

சிந்தி பிரம்மசமாஜத்து அங்கத்தினர்களோடு பரமஹம்சதேவர் உரையாடிக்கொண்டிருக்கிறார்.

பரமஹம்சர் பகர்ந்ததாவது : ''பாலில் தண்ணீரை வார்த்தால் அவையிரண்டும் ஒன்ருகக் கலந்து போகின்றன. ஆனல் பாலைக் காய்ச்சித் தயிராக மாற்றி அதைக் கடைந்தால் வெண்ணெய் பிரிந்து வருகிறது. அப்படிப் பிரிந்து வந்த வெண்ணெய் பிறகு தண்ணீரில் கலக்காது. அது தன் இயல்போடு மிதக்கிக் கொண்டிருக்கும். ஆத்ம சாதகன் ஒருவனுடைய நிலைமையும் அத்தகையது. சாதனங்களில் ஈடுபடுவதற்கு முன்பு ஒருவன் உலகத்தவரோடு இணங்குவானுகில் அவனும் உலகத்தவனுகிவிடுவான். ஆனல் நன்கு ஆத்ம சாதனங்கள் புரிந்து பக்தியிலும் ஞானத்திலும் அவன் முன்னேற்றம் அடைந்திருப்பானுகில் பிறகு இலெளகிக விஷயங்களில் அவன் மூழ்கிப் போகமாட்டான். உலகத்தவரோடு தொடர்பு வைக்க நேர்ந்தாலும் அவனுடைய பக்திக்கும் ஞானத்துக்கும் இடைஞ்சல் ஏதும் வாராது.

''உலக வாழ்க்கையை ஒழுங்காக நடாத்த நீங்கள் யாவரும் கடமைப்பட்டிருக்கிறீர்கள். அதை ஒரு பொழுதும் புறக்கணிக்க வேண்டாம். ஆனல் ஈசுவர அனுபூதி அடையப் பெறுவது மானுட வாழ்க்கையின் குறிக்கோள். அதை முன்னிட்டு ஈசுவரனுடைய தாமரைத் திருவடிகளை ஒரு கையில் உறுதியாகப் பற்றிப் பிடித்துக் கொள்ளுங்கள். மற்ருெரு கையைக் கொண்டு உலகக்கிருத்தியங்களைஇனிது நிறைவேற்றுங்கள். முறையாக உலகக் கடமைகளை நிறைவேற்றி வருகிறவர்களுக்குச் சிற்சில தருணங்களில் ஓய்வு கிடைக்கும். அப்படி ஓய்வு கிடைக்கிற காலங்களிலெல்லாம் இரு கரங்களையும் கொண்டு இறைவனுடைய திருவடிகளைப் பற்றிப் பிடித்துக்கொண்டு ஆழ்ந்து சாதனங்களில் ஈடுபடவேண்டும். சந்தர்ப்பங்கள் கிடைக்கின்றபொழுது ஏகாந்தவாசம் பண்ணிப் பழகுவது உசிதம். தன்னந்தனியனுக இருந்து கொண்டு தியானத்தில் ஈடுபடவேண்டும். இறைவனுக்காகவென்று தொண்டு புரிதலை எக்காரணத்தைக் கொண்டும் நிறுத்திவிடலாகாது. பகவானுக்குப் பணிவிடை பண்ணுவதற்கேற்ப ஆத்ம சாதகன் பண்பாட்டில் மேல்நோக்கிப் போகிருன்.''

உபநியாயாதிபதி(மகிழ்ச்சியுடன்): ''ஐயனே, தாங்கள் திருவாய் மலர்ந்தருளுகிற கருத்துக்கள் அற்புதமானவைகளாக இருக்கின்றன. சொல்லழகும் பொருள் அழகும் அவைகளில் செறிந்து கிடக்கின்றன. ஏகாந்தத்தில் இருந்து கொண்டு ஆத்ம சாதகன் ஒருவன் சாதனங்கள் புரியவேண்டும் என்பதற்கு ஐயம் ஏதுமில்லை. ஆனல் இக்கோட்பாட்டை நாங்கள் அறவே மறந்து விடுகிறோம். எடுத்த எடுப்பிலேயே ஜனக மகாராஜாவுக்கு நிகராக நாங்கள் பெருநிலை அடைந்திருக்கிறோம் என்று எங்களைப் பற்றி மனக்கோட்டை கட்டிக்கொள்ளுகிறோம். (பரமஹம்சதேவரும் பக்தர்களும் கொல்லென்று சிரிக்கின்றனர்.) உலகக் கிருத்தியங்களை நிறுத்திவிட வேண்டியது அவசியமல்ல என்று இயம்புகிறீர்கள். அச்சொல்லைக் கேட்கக் கேட்க எனக்கு மகிழ்வும் சாந்தியும் உண்டாகின்றன. குடும்பத்தில் இருந்து கொண்டே ஒருவன் ஈசுவரானுபூதியை அடையக்கூடுமென்று நீங்கள் கூறுவது எனக்கு மட்டில்லா மகிழ்ச்சியை உண்டு பண்ணுகிறது.''

பரமஹம்சதேவர் : ''நீங்கள் உலகைத் துறப்பதற்கு அவசியம் யாது உளது? வாழ்வு என்னும் போராட்டத்தை நீங்கள் நடாத்தியே ஆகவேண்டும். அப்போராட்டத்தைக் கோட்டைக்குள்ளிருந்து புரிவது புத்திசாலித்தனம் அல்லவா? பொறிவாயில்கள் ஐந்தோடு நீங்கள் போர் புரிந்தாகவேண்டும். பசி, தாகம் என்னும் குறை நிலைகளையும் எதிர்த்து நீங்கள் போராடியாகவேண்டும். ஆதலால் அப்போராட்டத்தின் பொருட்டு உலக வசதிகளையெல்லாம் வேண்டியவாறு அமைத்துக்கொள்ள வேண்டும். அறிவுத் திறனுக்கு அதுவே அறிகுறி. அப்பொழுது போராட்டத்தைத் திறமை

யுடன் கொண்டு செலுத்துவீர்கள். மற்றொரு விஷயம். இக்கலியுகத்திலே மானுடனுடைய ஜீவிதம் உணவைச் சார்ந்திருக்கிறது. ஒரு நாள் உணவை ஒழிக்க மனிதனுக்கு இயலாது. ஒருநாள் உண்பதற்கு ஒன்றுமில்லாது போய் விட்டால் கடவுளைப்பற்றி நீங்கள் அறவே மறந்துவிடுவீர்கள். 'நான் உலகைத் துறக்கப் போகிறேன்' என்று மானுடன் ஒருவன் தன் மனைவியிடம் சொன்னான். அப் பெண்பாலோ பகுத்தறிவு நிறையப் படைத்தவள். அவள் இயம்பியதாவது: 'இங்குமங்கும் நீங்கள் அலைவானேன். வயிற்றுப் பசியைத் தணிப்பதற்குப் பத்து வீடுகளில் சென்று அலைந்து திரியவேண்டிய அவசியம் நேராது என்று எண்ணுவீர்களானால் நீங்கள் வீடுவாசலைத் துறந்து வெளியேகலாம். ஆனால் பிட்சா அன்னத்தின் பொருட்டு நீங்கள் வீடு வீடாகப் போவதைத் தவிர்க்க முடியாதென்றால் இந்த ஓரிடத்திலேயே தங்கிவிடுங்கள். இங்கு உங்களைத் தேடி உணவு தானே வரும்.'

"மீண்டும் ஒருமுறை நான் உமக்கு எடுத்து இயம்புகிறேன். உலகைத் துறப்பதற்குக் காரணம் யாது உளது? அதைத் துறக்க வேண்டிய அவசியமில்லை. இல்வாழ்க்கையில் ஆத்ம சாதனத்துக்குத் தேவையான வசதிகள் பல உள. உடலைப் பேணுதற்கு உணவைத் தேடும் தொந்தரவு துறவி ஒருவனுக்கு மிக உண்டு. அத்தகைய தொந்தரவு இல்வாழ்பவனுக்கு இல்லை. இல்லாளோடு அவன் இனிது வாழ்ந்திருக்கலாம். அதில் தீங்கு ஏதும் கிடையாது. சரீர சம்ரட்சணைக்குத் தேவையானவைகள் அப்போதைக்கப்போது வந்து வாய்க்கின்றன. இல்வாழ்பவன் ஒருவன் நோய்வாய்ப்படும்படி நேர்ந்தால் அவனுக்குப் பணிவிடை பண்ணுவதற்கு உற்றார் யாரேனும் ஒருவன் வந்து வாய்க்கிறான். அத்தகைய வசதிகளைப் பயன்படுத்திக்கொண்டு குடும்பி ஒருவன் தொடர்ந்து கடவுள் நாட்டத்தில் ஈடுபட்டிருக்கலாம்.

"ஜனகர், வியாசர், வசிஷ்டர் முதலாயினோர் ஆத்ம ஞானத்தை அடையப்பெற்றன பிறகு குடும்பிகளாகவே இவ்வுலகில் வாழ்ந்திருந்தனர். குடும்ப வாழ்வு அன்னவர்களுக்கு இடைஞ்சலாகத் தென்படவில்லை. ஞானத்தைப் பெறுவது ஒருவனுக்கு ஞானவாள் ஆகிறது. உலக நலனுக்காக உழைப்பது சான்றோர் ஒருவருக்குப் பணிவிடைவாள் ஆகிறது. இந்த இரண்டுவிதமான வாள்களையும் இந்த மகரிஷிகள் உடைத்திருந்தனர்."

உபநியாயாதிபதி: "நமக்கு ஞானம் வாய்த்திருக்கிறது என்பதை நாம் அறிந்துகொள்வது எப்படி?"

பரமஹம்சதேவர்: "ஞானம் அடையப் பெற்றுள்ள ஒருவன் கடவுள் எங்கேயோ தூரத்தில் இருக்கிறார் என்று கருதுவதில்லை. 'அவர்' என்று அப்பொருளைத் தனக்கு அன்னியமாகக் கருதுவதில்லை. தனக்கும் தன் தெய்வத்துக்கும் இடையில் அனன்ய பாவனை அவனுக்கு வாய்க்கிறது. தன் வழிபடு தெய்வத்தைத் தன் உள்ளத்தின் உள்ளேயே உறைந்திருப்பதாக அவன் உணருகிறான். நீக்கமற எங்கும் நிறைந்துள்ள பரமன் எல்லார் உள்ளங்களிலும் உறைகிறான். அப்பரமனை நாடுகின்ற ஆத்ம சாதகன் அவனுடைய சாந்நித்தியத்தைத் தன் உள்ளத்தின் உள்ளேயே உணருகிறான். அத்தகைய அனுபவமே அனுபூதியென இயம்பப் பெறுகிறது."

உபநியாயாதிபதி: "ஐயனே, நான் ஒரு பாபி. அத்தகைய நான் கடவுள் என் உள்ளத்தினுள்ளே உறைந்திருக்கிறார் என்று இயம்புவது எங்ஙனம்?"

பரமஹம்சதேவர்: "பிரம்மசமாஜத்து அங்கத்தினர்களாகிய உங்களிடமுள்ள உபத்திரவம் இது ஒன்றேயாகும். நீங்கள் எல்லாரும் பாபம் பாபம் என்னும் பல்லவி பாடுபவர்களாக இருக்கின்றீர்கள். கிறிஸ்துவர்களிடத்திலிருந்து இக்கொள்கையை நீங்கள் ஏற்றுக் கொண்டிருக்கிறீர்கள் அல்லவா? அன்பன் ஒருவன் ஒரு தடவை பைபிள் என்று இயம்பப் பெறுகிற விவிலிய நூல் ஒன்றைக் கொடுத்தான். அதில் ஏதேனும் ஒரு பகுதியை வாசித்துக் காட்டும்படி பக்கத்திலிருந்தவனிடம் கொடுத்தேன். பாபம், பாபம் என்கின்ற ஒரு பொருள் அதில் நிறைந்திருப்பதை நான் காணலானேன். அத்தகைய பாபக் கருத்துக்கள் ஒருவனுக்கு உதவமாட்டா. தெய்வ பக்தியில் மானுடன் ஒருவனுக்கு ஆழ்ந்த விசுவாசம் இருக்கவேண்டும். சிவா என்றோ, ராமா என்றோ, ஹரி என்றோ நான் இறைவனுடைய

திருநாமத்தை ஓதி வருகிறேன். கடவுளுடைய திருநாமத்தில் தோய்ந்திருக்கும் என்னிடம் பாபம் எப்படி வரமுடியும்? திருநாமத்தை ஓது கிற நான் எப்படிப் பாபி ஆக முடியும்? இத்த கைய தீவிர நம்பிக்கை ஆத்ம சாதகன் ஒருவ னிடம் இருக்க வேண்டும். கடவுளுடைய மகிமைகளில் ஊறி இருப்பவனிடம் பாபம் எப்படி நுழைய முடியும்?''

உபநியாயாதிபதி: ''ஐயனே, அத்தகைய தெய்வவிசுவாசம் ஏற்பட உபாயம் யாது?''

பரமஹம்சதேவர்: ''கடவுள் பக்தியை ஆர்வத்தோடு வளர்த்து வருவீராக. உங்களு டைய பிரம்மசமாஜத்து'' பிரார்த்தனைகளில் ஒன்றில் அடங்கியிருக்கும் கருத்துக்களாவன: இறைவா, மானுடன் ஒருவன் வேண்டியவாறு வழிபாட்டு முறைகளையும், வேள்விச் சடங்கு களையும் கையாண்டு வரலாம். ஆனால் இறைவா, உன்னிடத்து ஆழ்ந்த பக்திபண் ணுது உன்னை அறிந்து கொள்வது எங்ஙனம்?

''ஏகாந்தத்திலிருந்து கொண்டு கண்ணீரும் கம்பலையுமாக இறைவனிடம் பிரார்த்தனை பண்ணிப் பழகவேண்டும். பேரார்வமும், பரந்த பக்தியும் வந்து வாய்க்க வேண்டுமென்று உரு கிய உள்ளத்துடன் இறைவனிடம் விண்ணப் பிக்கவேண்டும். பரமனை நாடிக் கண்ணீர் சிந்துதல் வேண்டும். குடும்பி ஒருவன் நோய் வாய்ப்பட்டிருக்கிற தன் மனைவிக்காகக் குடம் குடமாகக் கண்ணீர் சிந்துகிறுன். தன்னிடம் உள்ள செல்வம் கரைந்து போகிறபொழுது தான் தேடிய தேட்டையனைத்தும் பாழாகப் போகிறது என்று கதறிப் பதறி அழுகின்றுன். ஏதேனும் ஓர் உத்தியோகம் தனக்கு வாய்க்க வேண்டுமென்று அவன் படாதபாடுபடுகின் றுன். ஆனல் கடவுளை நாடி இதே ஊக்கமும், வியாகூலமும்,கம்பலையும் கொள்ளுபவர் யார்?''

திரைலோக்யர்: ''ஐயனே, இன்றைக்குள்ள கற்றவர்களின்நிலை பரிதாபகரமானது. மனைவி மக்களைப்பற்றிக் கவனிப்பதற்குக்கூட அவர் களுக்கு அவகாசம் போதாது. ஆங்கிலேய அதிபதிகளுக்கு அடிமைகளாக உத்தியோகம் புரிவதில் பெரும்பகுதியான காலம் ஒப்படைக் கப்படுகிறது.''

பரமஹம்சதேவர்: ''அத்தகைய நெருக்கடி யில் வைக்கப்பட்டிருக்கிறவர்கள் ஒரு காரியம் செய்யலாம். தங்களுக்கு அமைந்துள்ள கடமை களை யெல்லாம் நிறைவேற்றி வருவதற்கிடை யில் தங்களைப்பாதுகாக்கும் பொறுப்பைப் பரம னிடம் ஒப்படைத்துப் பழகலாம். இப்பயிற்சி அடைக்கலம் புகுதல் எனவும், தஞ்சம் புகுதல் எனவும் கருதப்படுகிறது. 'இறைவா, இப்பிர பஞ்ச வாழ்க்கையில் யார் யார்க்கோ அடி பணிந்து அலுவல்கள் புரியும் நெருக்கடியில் நான் இருக்கிறேன். அத்தகைய நிலையிலிருக் கும் என்னை நீ உய்வித்து அருளுவாயாக.' இத்தகைய மனப்பான்மையை வளர்த்து வந் தால் அதினின்று நலன் விளையும். வெளியூருக் குப் போகிற மானுடனொருவன் தன்னுடைய குடும்பப் பொறுப்புக்களை நல்லான் ஒருவ னிடம் ஒப்படைப்பானுகில் அந்த நல்ல மனிதன் அந்தக் குடும்பத்துக்குக் கேடு ஒன்றும் செய்ய மாட்டான். அதே விதத்தில் பரமனைச் சார்ந் திருந்து நீங்கள் உங்களுக்கு அமைந்துள்ள கடமைகளையெல்லாம், முறையாக நிறைவேற்றி வாருங்கள். கடவுளைச் சார்ந்திருந்து தன் கடமைகளை முறையாகக் கடைப்பிடிப்பவ னுக்குக் கவலைகள் உண்டாகமாட்டா. கவலைப் படாது தனக்கு அமைந்துள்ள கிருத்தியங்களை அவன் நன்கு நிறைவேற்றி வருகிறுன். பூனைக் குட்டி ஒன்றன் பான்மையை எண்ணிப் பாருங் கள். தன்னை எப்படியாவது காப்பாற்றிக் கொள்ளவேண்டுமென்று அது கணக்குப் போடுவதில்லை. அது முற்றிலும் தன் தாயைச் சார்ந்திருக்கிறது. 'மியூ மியூ' என்று தாயைக் கூவி அழைப்பது ஒன்றுதான் அதன் செயல். தாய்ப்பூனை எந்த இடத்துக்குத் தன்னைக் கௌவிக்கொண்டு போய் வைக்கிறதோ அந்த இடத்தில் திருப்தி கொண்டதாக அது இருக் கிறது. ஒரு வேளையில் அது சாம்பல் குழியில் வைக்கப்பட்டிருக்கிறது. மற்றொரு வேளையில் அவ்வீட்டுத் தலைவனுடைய மிருதுவான படுக் கையின்மீது அது வைக்கப்பட்டிருக்கிறது. அவ்விரண்டு நிலைகளும் பூனைக்குட்டிக்கு ஒன்றேயாம். தன் தாயைச் சார்ந்திருப்பது ஒன்றே அதன் செயல் ஆகிறது. அதே விதத் தில் நீங்கள் கடவுளைச் சார்ந்திருந்து பழகுவீர் களானல் உங்களுக்குக் கவலைகள் அதிகம் உண் டாகமாட்டா. உங்களுடைய கடமைகளையும் முறையாக நீங்கள் நிறைவேற்றி வருவீர்கள்.'

# பராபரக் கண்ணி

( தாயுமானவர் இயற்றியது )

338. எட்டுத் திசையுமொன்ருய்
இன்பமாய் நின்றவுன்னை
விட்டுப் பிரியவிடம்
வேரூ பராபரமே.

நாம் விழித்திருக்கும் வேளையில் ஏதேனும் ஓர் இடத்தில் இருக்கிருேம். ஆதலால் இடம் நமக்கு ஆதாரமாகவும், அதில் நாம் ஆதேய மாகவும் அமைந்திருக்கிருேம். ஆனுல் கனவற்ற உறக்கத்தில் நம் நிலைமை வேறு ஆகிறது. கருவி கரணங்களெல்லாம் ஆங்கு ஒடுங்கிப் போகின்றன. சித்தவிருத்தி ஆங்கு இல்லை. வெறும் பிரக்ஞை தன்னில் தானுய் இருக்கிறது. மனிதன் படுத்து உறங்குகிற அறையில் அவனுடைய உடல் நித்திராவஸ்தையில் கிடக்கிறது. பிரக்ஞை மயமாகிய அன்னவன் உடலில் அடங்கியவனும் அல்லன். அறையில் கிடப்பவனும் அல்லன். அவன் தன்னில் தானுய் இருக்கிருன்.

கால தேச நிமித்தம் (time, space, causation) மயமாக இப்பிரபஞ்சம் இருக்கிறது. மேலும் கால தேச நிமித்தம் மயமாக மனது இருக்கிறது. மனம் ஒடுங்கிய இடத்தில் கால தேச நிமித்தமுமில்லை, பிரபஞ்சமுமில்லை. வெறும் பிரக்ஞை மட்டும் தன்னில் தானுய் இருக்கிறது. மனேகற்பனையாக அமைந்துள்ள இடத்தில் பரவஸ்து அடங்காது. 'நீக்கமற எங்கும் நிறைபொருள்' என்பதுவெறும் பெயரளவிலாம். பரவஸ்துவோ வெறும் நிறைபொருள், பூரணம். அதற்கு இடம் தேவையில்லை. இடம் என்னும் கற்பனை மனதில் இருக்கிறது. அந்த மனதோ பரவஸ்துவினின்று தோன்றியுள்ளது. பரவஸ்துவை ஆதாரமாகக்கொண்டு அதில் நிலைத்திருக்கிறது. பிறகு பரவஸ்துவிலேயே அது ஒடுங்குகிறது. நாள்தோறும் நாம் அனுபவிக்கும் சுஷுப்தி அவஸ்தை அல்லது கனவற்ற உறக்கமே இதற்குச் சான்ருகிறது. எட்டுத் திசைகளைக் கற்பிப்பது மனது. அந்த மனது தானே ஒரு கற்பனை. மனம் போன விடத்தில் அதனுடைய கற்பனையாகிய திசைகளும் ஒடுங்கிப்போகின்றன. உபசாரத்துக்காக எங்கும் வியாபித்துள்ள திசை அல்லது இடத்துக்கு மதிப்புத் தருகிருேம். இடத்துக்கு ஆகாசம் என்பது மற்ருெரு பெயர். அந்த ஆகாசமே மனதின் கற்பனையென்ருல் அந்த ஆகாசத்தினின்று பரிணமித்து வந்துள்ள வாயு, அக்னி, நீர், நிலம் முதலியனவும் கற்பனையாம். இந்தப் பஞ்ச பூதங்களைக் கற்பனையென்ருல் அவைகளால் ஆக்கப்பெற்றுள்ள பிரபஞ்சமும் கற்பனையாம். அயர்ந்த உறக்கமே இதற்குப் பிரமாணமாகிறது. உறக்கத்திற்குப் புறம்பாக வேறு சாஸ்திரப் பிரமாணம் இதற்குத் தேவையில்லை.

நான் என்னும் ஜீவவியக்தியில் அசேதனமாகிய உடல், உள்ளம் இடம்பெறுகின்றன. சேதனமும் இடம் பெறுகிறது. ஆக ஜீவவியக்தி சேதனம், அசேதனத்தின் கூட்டுறவால் இடம் பெறுகிறது. மானுடன் படைத்திருக்கிற உடலும், உள்ளமும் பிரபஞ்ச அமைப்பில் ஒரு சிறு அலைக்கு நிகர். மானுடன் படைத்திருக்கின்ற சேதனம் அல்லது பிரக்ஞை அல்லது பிரக்ஞானம் கட ஆகாசத்துக்கு நிகர். கட ஆகாசம் மகா ஆகாசத்துக்குப் புறம்பானதன்று. அதே விதத்தில் ஜீவாத்மாவிடத்திலிருக்கும் நிஜ நிலையாகிய சேதனம் அல்லது பிரக்ஞை பூரணப் பிரக்ஞைக்குப் புறம்பானதன்று. அலை எங்ஙனம் சமுத்திரத்திற்குப் புறம்பானதல்லவோ அங்ஙனம் ஜீவப் பிரக்ஞை பூரணப் பிரக்ஞைக்குப் புறம்பானதன்று. இக்கோட்பாடே இக்கண்ணியில் அடங்கியுள்ள தத்துவமாகும். இதைச் சிந்தனை பண்ணுவது நல்ல ஆத்ம சாதனமாகிறது.

339. பிரியா துயிர்க்குயிராய்ப்
பின்னமற வோங்குஞ்
செறிவே அறிவே
சிவமே பராபரமே.

பின்னம் - பேதம்; பின்னமற - வேற்றுமையின்றி. ஓங்குதல்-வியாபித்திருத்தல்; செறிவு-நிறைவு அல்லது பூரணம்; அறிவு-சிதாகாசம். சிவம்-மங்கலப் பொருள்.

பேத உணர்ச்சி பூண்டிருப்பதை அக்ஞானம் என்றும், அபேதத்தில் நிலைத்திருப்பதை ஞானம் என்றும் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர்

பகர்ந்துள்ளார். கடற்கரையில் நின்று கொண்டு கடலைப் பார்க்கின்றபொழுது ஒன்றன் பின் ஒன்ருக எண்ணிறந்த அலைகள்காட்சி கொடுக்கின்றன. விமானத்தில் மேலே போகப் போக அலைகள் மறைந்துபட்டுப் போகின்றன. வெறும் கடலே காட்சிக்கு எட்டுகிறது. தரையில் நின்றுகொண்டு பூமியைப் பார்க்கின்ற பொழுது மேடுகளும், மடுவுகளும் ஏராளமாகத் தென்படுகின்றன. மலையுச்சியினின்று பார்க்கின்றபொழுது மேடு, மடுவுகளெல்லாம் மறைந்துபட்டுப் போய் ஒரே சமவெளி தென்படுகிறது. சில வேளைகளில் கடல் அலைவீசுவதில்லை. சாந்தமான ஒரே நீர்ப்பரப்பாக அது காட்சி கொடுக்கிறது. அலைகள் எங்ஙனம் தாற்காலிகமாகக்கடலில்தென்படுகின்றனவோ அங்ஙனம் அறிவுப் பெருவெளியாகிய பரம் பொருளினிடத்து அனந்தங்கோடி ஜீவவியக்திகள் வடிவெடுத்து விளங்குகின்றன. அலைகளாகக் காட்சி கொடுக்கிறவிடத்தும் அவ் அலைகள் கடலுக்குப் புறம்பானவைகள்ஆகமாட்டா. கடல் என்றும் அலைகள் என்றும் பின்னப்படுத்துவது வெறும் பெயரளவிலேயாம். உண்மையில் கடலும் அலைகளும் அபின்னம். அதே விதத்தில் எண்ணிறந்த ஜீவகோடிகள் அகண்டமாயுள்ள அறிவுப் பெருவெளியிலுள்ள வெறும் தோற்றங்களாம். ஆக பேதத்தைப் பார்ப்பது அறிவின்மை. அபேதத்தைக் காண்பது மெய்யறிவு. இறைவா, மனதால் உண்டு பண்ணப்படுகிற எல்லாவிதமான பேதங்களையும் தாண்டி அபேதமாகிய உன்னுடைய நிஜ நிலையில் நான் இருந்து பழகுவேனுக என்பது இக்கண்ணியின் கருத்து.

**340.** ஏதேது சொன்னுலும்
எள்ளளவும் நீயிரங்காச்
சூதே தெனக்குளவு
சொல்லாய் பராபரமே.

சூது-கபடம்; உளவு-உட்பொருளை அறியும் உபாயம்.

ஈசனுடைய பஞ்ச கிருத்தியங்களுள் மறைத்தல் என்பது ஒன்று. ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள இணக்கத்தை வெளிக்குக் காட்டாது மறைத்து வைப்பது ஈசனுடைய திருவிளையாடல்களில் ஒன்ருகும். இதை ஓர் உபமானத்தால் விளக்கலாம். தன் குழந்தையோடு விளையாடிக்கொண்டிருக்கிற தாய் ஒரு நிலையில் அதன் கண்ணுக்குத் தென்படாது மறைந்து கொள்ளுகிருள். குழந்தையானது தாயைத் தேடி அலைவதைப் பார்த்து அவள் மகிழ்வடைகிருள். தேடிச் சலித்துப்போன பிறகு தன் தாயைக் காணவில்லையே என்று அது ஏங்கி அழுகிறது. அவ் அழுகை பிறகு தாயால் சகித்திருக்க முடியாத உச்சநிலை எய்துகிறது. மேலும் மறைந்திருப்பது பொருந்தாது என்று எண்ணிக் குழந்தையின் முன்னிலையில் தாய் தோன்றிக் காட்சியளிக்கிருள். அந்நிலையில் தாய்க்கும் மகிழ்வு, சேய்க்கும் மகிழ்வு. இதே பாங்கில் திரோதானம் அல்லது மறைத்தல் என்னும் லீலையின் வாயிலாக இறைவன் காட்சிக்கு எட்டாதவனுக இருக்கிருன். அவனுடைய அருளையும் திருக் காட்சியையும் நாடி ஆத்ம சாதகன் கதறிப் பதறி அழுகின்றுன். அத்தகைய அழுகையில் அவனுக்குப் பிரயோஜனம் இருக்கிறது. இரும்பு, தங்கம், வெள்ளி ஆகிய உலோகங்களைத் திரும்பத் திரும்பக் காய்ச்சி உருக்குவதற்கேற்ப அவைகள் மாசு நீங்கப் பெறுகின்றன. அதே விதத்தில் பரமனை நாடி ஆத்மசாதகன் அழுவதற்கு ஏற்ப அவன் ஆத்ம பரிபாகம் அடைகிருன். அத்தகைய ஆத்ம பரிபாகத்தின் பொருட்டே இறைவன் ஆரம்ப தசையில் மறைந்திருக்கிருன். அழுகையின் மூலம் மனத்துக்கண் உள்ள மாசு முழுவதும் நீங்கப் பெறுகிறபொழுது பரமனுடைய காட்சி இயல்பாக வாய்க்கிறது. ஆக இதுவே பரமாத்மாவுக்கும், ஜீவாத்மாவுக்கும் உள்ள பேத அபேத நிலைகளைப்பற்றிய உறவாம். நூலறிவால் ஆத்ம சாதகன் தனக்கும் பரமாத்மனுக்கும் இடையில் உள்ள இணக்கம் அபேதம் என்றுஎண்ணியிருந்தால் போதாது. ஒவ்வொரு ஆத்மசாதகனுக்கும் அருள் நாட்டம் ஓங்கவேண்டும். அந்த நாட்டம் அவனைப் பித்துப்பிடித்தவன்போன்று செய்யவேண்டும். உலையில் உருகி எங்ஙனம் உலோகங்கள் பண்படுகின்றனவோ அங்ஙனம் அருள் நாட்டத்தில் உருகி ஆத்ம சாதகன் பண்பாடு அடையவேண்டும். பண்பாடு அடையாது அருளுக்குப் பாத்திரம் ஆக வேண்டும் என்று பரமனைக் கேட்பது பொருளற்றது என்பது இக்கண்ணியின் கருத்து.

# பரபோதம்

( ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருட்செல்வரான சுவாமி பிரம்மானந்தரின் போதனை )

வாழ்க்கைக்குச் சிறந்த வழிகாட்டுபவர் அமைவது நல்லது. நல்வழி எது என்பதை அறியாது மக்கள் கெட்டுப் போகின்றனர். வாழ்க்கையில் தாயும் தந்தையும் முதல் வழிகாட்டிகள் ஆகின்றார்கள். ஆகையினால்தான் 'அன்னையும் பிதாவும் முன்னறிதெய்வம்' என்ற பழமொழி ஏற்பட்டுள்ளது. நல்ல தாய் தந்தையர்கள் அமைந்துவிட்டால் வாழ்வு மேலாம் வாழ்வாக மாறி அமைந்துவிடுகிறது. கல்வித் துறையிலும் தொழில் துறையிலும் வழிகாட்டித் தருபவர்கள் சாதாரண குரு ஆகிறார்கள். கடவுள் தரிசனம் பெறுவதற்கு வழிகாட்டித் தருபவரே உயர்ந்த குரு ஆகிறார். கடவுள் தரிசனம் பெற்றவர், தாம் கண்ட உண்மையைச் சிஷ்யனுக்குப் புகட்டுகின்றார். ஆத்மானுபூதி பெற்றவரின் துணை உனக்குக் கிடைத்துவிட்டால் கடவுள் காட்சி பெறுவது உனக்கு மிகவும் எளிது. மந்திரத்தை உபதேசித்து உள்ளத்திலுள்ள இருளைப் போக்குபவர் ஞான குரு ஆகிறார். சாதனையை நீ எப்படிச் செய்ய வேண்டும் என்பதை அவர் தெளிவாக உனக்கு விளக்கிக் காட்டுவார். ஆத்ம ஞானம் உடைய குரு சமயத்துறையில் உனக்குத் தெளிவு உண்டுபண்ணுகிறார். சமயத் துறையில் போலிகள் ஏராளமாக இருக்கிறார்கள். அவர்கள் காட்டித் தரும் மார்க்கங்களும் போலி மார்க்கங்களாகின்றன. போலி குருமார்களை நம்பிப் போலிமார்க்கத்தில் செல்பவர்கள் சமயத்துறையில் ஏமாற்றம் அடைவார்கள். உண்மையான குரு உண்மை நெறியை உனக்குக் காட்டித் தருகிறார். உண்மையான குருவினிடத்தில் ஆழ்ந்த பக்தி வைக்கவேண்டும். குருவைப் பிரம்மசொருபமாகக் கருதவேண்டும். குரு பக்தியின் விசேஷத்தால் குருவின் ஞானம் உனக்கு வந்துவிடும்.

சமய சாதனையைத் தொடர்ந்து செய்து வர வேண்டும். பிரார்த்தனை, வழிபாடு, தியானம் முதலியன முறையாகச் செய்துவரவேண்டும். முதலில் தியான நேரம் பதினைந்து நிமிடங்கள் இருக்கலாம். பிறகு அது ஒரு மணி, இரண்டு மணிகளாக அதிகரிக்கவேண்டும். தியானம் செய்யவேண்டும் என்ற ஆவல் உன் உள்ளத்தில் வந்துகொண்டே இருக்கவேண்டும். தியான நேரம் அதிகரித்துக்கொண்டே வர வேண்டும். தியானம் அதிகரிக்கின்ற அளவு மனதுக்கு ஆற்றலும், தெளிவும் அதிகரித்துக் கொண்டே இருக்கும். வாழ்க்கையில் ஒரு ஒழுங்குப்பாட்டை அமைத்துக் கொண்டு அதைத் தவறாது பின்பற்ற வேண்டும். சாதனமின்றி ஒன்றைச் சாதிப்பாருலகிலில்லை' என்ற கோட்பாட்டின்படி முறையாகச் சாதனை செய்துவர வேண்டும். உன் இஷ்ட தெய்வத்தை மனதாலேயே வழிபட்டு வரவேண்டும். இஷ்ட தெய்வத்தின் வடிவத்தை முதலில் மனதால் சிந்தித்துப் பழகவேண்டும். பிறகு அவர் ஜோதி வடிவமானவர் என்று அவரை ஜோதி சொருபத்தில் மனதுக்குள் வழிபடக் கற்றுக்கொள்ள வேண்டும். பிறகு அந்த வடிவமும் மறைந்து போய் வடிவத்துக்கெல்லாம் அப்பால் உள்ள நிலையில் தியானம் பண்ணவேண்டும். கடவுள் உருவமாகவும், உருவத்தைக் கடந்தவராகவும் இருக்கின்றார். உருவத்தோடுகூடிய கடவுளைச் சகுண பிரம்மம் என்றும் உருவத்தைக் கடந்த நிலையில் அவரை நிர்குண பிரம்மம் என்றும் அழைக்கின்றோம்.

பிரம்மம் சத்தியம், ஜகத் மித்தை என்று வேதாந்தம் பகர்கிறது. இதற்குச் சிறிது விளக்கம் தேவைப்படுகிறது. பிரபஞ்சமாகக் காணப்படும் தோற்றம் பொய்த் தோற்றம். சமாதியில் அத்தோற்றம் முற்றிலும் மறைந்து போகிறது. சமாதி அடைந்தவர்கள் சமாதியிலிருந்து வந்தபின் தங்கள் அனுபவத்தை இங்ஙனம் பகர்ந்திருக்கிறார்கள். ''சமாதியில் பேரானந்தம் ஒன்றே அனுபவத்துக்குரியதாக இருக்கிறது. அவ் ஆனந்தத்துக்கு எல்லையே இல்லை. நான், நீ என்பனவெல்லாம் ஆங்கு அடியோடு அழிந்து போகின்றன. சத், சித், ஆனந்தம் ஒன்றே எஞ்சியிருக்கிறது. இதற்கு மேல் அவ் அனுபவத்தை விளக்குவதற்கு வார்த்தைகள் இல்லை.''

சர்க்கரை எப்படி இருக்கும் என்று அறிந்து கொள்வதற்கு அதைச் சுவைத்துப் பார்த்தாக

வேண்டும். கடவுளைப்பற்றி அறிந்துகொள்வதற்கு மனம் பரிசுத்தமாகவேண்டும். உணர்வு தூய உணர்வாக மாறினால்தான் கடவுள் காட்சி கிட்டும். மனதைத் தூய்மைப்படுத்துவதற்குச் சாதனை செய்யவேண்டும். பொறுமையோடும், உறுதியோடும் சாதனையைத் தொடர்ந்து செய்துவரவேண்டும். உன் மனம் பரிபாகம் அடையும்பொழுது கடவுள் காட்சி உனக்குக் கிட்டும்.

சாதனை செய்யும்பொழுது சிற்சில சமயம் மனதில் உற்சாகம் குறைவதுண்டு. அது சாதனைக்கு வரும் பெரிய இடையூறு ஆகும். அதைப் போக்கிவிட வேண்டும். ஜபம், தியானம், பிரார்த்தனை ஆகியவைகளால் மனதிலுள்ள சோர்வை நீக்கி அதைத் தீவிர சாதனையில் ஈடுபடுத்த வேண்டும். இடைவிடாமல் மனம் தெய்வச் சிந்தனையிலே ஈடுபட்டிருக்குமானால் அதற்குத் தியானம் என்று பெயர். தியானம் முதிர்ந்தால் மனம் தெய்வத்தோடு லயமாகி விடுகிறது. அதைச் சமாதி என்கின்றோம். சமாதியில் உண்டாகும் இன்பமே நிலைத்த இன்பம் ஆகிறது. இந்திரியங்கள் மூலம் தேடுகின்ற இன்பம் நிலைத்த இன்பம் ஆகாது.

உன் இஷ்ட தெய்வத்தினுடைய திருவடிகளில் உன் மனதை நிலைநிறுத்து. மனதை உடலின் எந்தப் பாகத்தில் நிலைநிறுத்துவது என்பதைப்பற்றிச் சிலருக்கு ஐயம் ஏற்படுகிறது. புருவ மத்தியில் நிலைநிறுத்த வேண்டுமென்று சிலர் கூறுவார்கள். இன்னும் சிலர் ஹிருதயத்தில் மனதை நிலைநிறுத்த வேண்டுமென்று கூறுவார்கள். ஆரம்ப சாதகர்கள் மனதை ஹிருதயத்தில் நிலை நிறுத்துவதுதான் நல்லது. புருவமத்தியில் மனதை நிலை நிறுத்துபவர்கள் மனதோடு சிரமப்பட்டுப் போராடுவார்களானால் மண்டை இடி வந்துவிடும். மனம் அடங்கப் பெறுதவர்களுக்கு ஹிருதயமே சிலாக்கியமான இடமாகும். ஹிருதயம் மாமிசத்தாலும், இரத்தத்தாலும் ஆகிய உடல் கூறு என்று எண்ணுபவர்கள் ஹிருதயத்தில் கடவுளை எப்படித் தியானிப்பது? உடல் கூற்றைப் பற்றிக் கூறும் நூலில் சொல்லியுள்ள ஹிருதயத்தைப் பற்றி நீ நினைக்கக்கூடாது. தியானம் பண்ணும் பொழுது நான்காவது ஆதாரமாகிய ஹிருதயத்திலுள்ள அனாகதம் என்னும் ஆதாரத்தில் மனதை ஒருமைப்படுத்தி ஆத்ம சிந்தனை பண்ணவேண்டும். ஆரம்பத்தில் சரீரத்தைப் பற்றிய சிந்தனை வந்து கொண்டிருக்கும். சரீரத்தை மறந்து ஆத்மாவின் ஆனந்த நிலையைப்பற்றி நீ சிந்தனை செய்து பழகவேண்டும். உன் இஷ்டதெய்வம் ஹிருதயத்தில் ஆனந்த வடிவமாக இருக்கிறார் என்பதைத் தியானம் பண்ணலாம். உன் இஷ்ட தெய்வத்தின் வடிவம் உன் உள்ளத்தில் ஆனந்த உணர்ச்சியைத் தூண்டிவிடுவதாக இருக்கவேண்டும். இஷ்ட தெய்வத்தின் மந்திரத்தை மனதுக்குள்ளேயே ஜபம் செய்து பழகவேண்டும். இறைவனுடைய நாமத்துக்கு மந்திரம் என்று பெயர். நான் உன்னைப் பெயர் சொல்லி அழைக்கும் பொழுது உன்னுடைய வடிவம் என் மனக் கண்ணில் தோன்றுகிறது. இறைவனுடைய நாமத்தைச் சொல்லும் பொழுது இறைவனுடைய ரூபமும் உன் மனக்கண்ணுக்கு வரலாம். நாமத்தைச் சொல்லுவதற்கிடையில் நாமத்திற்குரிய வடிவத்தை நீ ஆழ்ந்து தியானம் பண்ணலாம்.

ஜபம் வாய்விட்டு உரக்கச் சொல்லப்படுவது ஒருமுறை. ஓசை வெளிவராது உதடு அசைகின்ற பாங்கில் இறைவன் நாமத்தை ஜபிப்பது மற்றொரு பாங்கு. உதடும் அசையாமல் மனதிற்குள்ளேயே மந்திரத்தை ஜபிப்பது மற்றொரு முறையாகும். மனதிற்குள்ளேயே ஜபிப்பதுதான் உயர்ந்த ஜபமாகும். நீ தனிமையாக இருக்கும் பொழுது உனக்கு மட்டும் ஓசை கேட்கும்படியாக வாய்விட்டு ஜபம் பண்ணலாம். மனதிற்குள்ளேயே ஓசை வெளிவராமல் ஜபம் செய்வது சூட்சும ஜபமாகும். மனதைத் திருத்தி அமைப்பதற்கு அது சிறந்த உபாயமாகும். மனம் பண்பட்டு வருவதற்குச் சில அறிகுறிகள் தென்படும். மந்திரத்தின் அக்ஷரங்கள் ஒளி பொருந்தியவைகளாக உள்ளத்திற்குத் தென்படலாம். மனதிலுள்ள ஆசையின் வேகம் குறைந்து கொண்டே வரலாம். மனதில் துயரங்கள் குறைந்து கொண்டே வரலாம். மனம் தெளிவடைந்துகொண்டேவரலாம். இந்த அறிகுறிகளுள் ஏதாவது உன் உள்ளத்திலிருக்குமாயின் நீ சரியான வழியில் முன்னேறிக்கொண்டு வருகிறாய் என்பது திண்ணம்.

# முழுமுதற்பொருள்

(ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் 1974ஆம் ஆண்டு விருதுநகர் அந்தர்யோகத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு)

''அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு''

என்பது மறைமொழி. வாழ்க்கைக்குரிய தத்துவங்களனைத்தும் இதில் அடங்கி இருக்கின்றன. உலகத்திலுள்ள எந்த மொழியை ஆராய்ந்தாலும், அம்மொழிக்கு ''அ''காரம் தான் முதலெழுத்தாக இருப்பது விளங்கும். ஆங்கில மொழியில் முதல் எழுத்தை ''எ'' என்று சொன்னாலும் நடைமுறையில் அது ''அ'' என்றுதான் உச்சரிக்கப்படுகிறது. ''அக்ஷராணாம் அகாரோ அஸ்மி'' என்று பகவான் கீதையில் பகர்ந்துள்ளார். எழுத்துக்களுக்குள் ''அ'' காரமாக நான் இருக்கிறேன் என்பது அதற்குப் பொருள். அகரம் வெவ்வேறு பிரிவோடு ஏனைய பன்னிரெண்டு உயிரெழுத்துக்களாகின்றது. மெய்யெழுத்துக்களோடு அது சேர்ந்து விதவிதமான ஓசையை உண்டாக்குகிறது. மொழி இங்ஙனம் உருவாகியது. ஒலியின் மூலம் நாம் கருத்தை வாங்கிக்கொள்ளவும், வழங்கவும் செய்கின்றோம். ''அ'' காரத்திலிருந்து எல்லாஓசைகளும் வந்திருப்பதுபோன்று முழுமுதல் பொருளாகிய பரமனிடத்திலிருந்து தான் சேதனம் அசேதனம் ஆகிய இப்பிரபஞ்சப் பொருள்கள் யாவும் வந்திருக்கின்றன. கல் நிலையிலிருந்து துவங்கி ஞானி வரையிலுள்ள எல்லா உயிர்களும் முழுமுதல் பொருளிடத்திலிருந்தே வந்திருக்கின்றன. நாம் உயிர் வகைகளைச் சரியாக ஆராய்ந்து பார்த்தால் கடவுளுக்குத் தலை வணங்கியாக வேண்டும். கீதையில் பத்தாவது அத்தியாயம் விபூதி யோகத்தில் இறைவனுடைய மகிமை பிரபஞ்சத்தில் என்னென்ன பாங்குகளில் மிளிர்ந்து கொண்டிருக்கிறது என்பது கூறப்படுகிறது. கண்காட்சிச் சாலையில் சிறந்த பொருள்களை வைத்திருக்கின்றோம். ஒரு பொருளின் சிறப்பு எத்தகையது என்பதைக் கண்காட்சிச் சாலையில் வைத்துக் காட்டுகின்றோம். அகிலாண்டமும் இறைவனைப்பற்றிய கண்காட்சியாக இருக்கிறது. இறைவனுடைய மகிமை சேதனம், அசேதனம், சரம், அசரம் ஆகிய அனைத்தின்பாலும் மிளிர்ந்து கொண்டிருக்கிறது.

உயிர்வகைகள் அனைத்திடத்தும் ஏதோ ஒரு விதத்தில் ஆயுதம் அமைந்திருக்கிறது. அவ்வாயுதம் தற்காப்புக்கும் பயன்படுகிறது; ஆக்கிரமிப்புக்கும் பயன்படுகிறது. ஆயுதமில்லாதவன் அரை மனிதன் என்பது கோட்பாடு. ஆயுதமில்லாத உயிர் தன் வாழ்க்கையைச் சரியாக நடாத்த முடியாது. இரண்டொரு சான்றுகளைக் கொண்டு உயிர்வகைகளிடத்து ஆயுதங்கள் எப்படி அமைந்திருக்கின்றன என்பதைப்பற்றி ஆராய்வோம். தேளை எடுத்துக்கொண்டால் அதற்கு ஆயுதம்அதன்கொடுக்காக இருக்கின்றது. அவ்வாயுதம் அதனிடத்திலிருப்பதால் அதன் பக்கத்தில் போவதற்கு அஞ்சுகின்றோம். பாம்புக்குப் பல்லில் விஷமிருக்கிறது. ஆகையினால்தான் பாம்பைக் கண்டால் படையும் நடுங்குகிறது. பொதுவாக பாம்பு நம்மைத் தாக்குவதில்லை. நாம் அதைத் தாக்கினால்அல்லதுநம்மைஅறியாதுநாம்அதற்கு உபத்திரவம் செய்துவிட்டால் தற்பாதுகாப்புக்காக அது நம்மைத் தீண்டுகின்றது. தனக்கு ஆபத்து வரும்பொழுது அது தன் ஆயுதத்தைக் கையாளுகின்றது. தேனீக்குக் கொடுக்கு ஆயுதமாக இருக்கிறது. தேன் கூட்டை முறையாகக் கையாண்டு தேனெடுத்தால் தேனீ கொட்டாது. முறை தவறி அதை உபத்திரவப் படுத்தினால் அது கொட்டிவிடும். ஒவ்வொரு உயிரும் தான் படைத்திருக்கிற ஆயுதத்தை முறைதவறிக் கையாளுவதில்லை. அவசியம் ஏற்படும்பொழுது உயிர்கள் தங்களிடத்திலுள்ள ஆயுதங்களைப் பயன்படுத்துகின்றன. மனிதனுக்கு முக்கரணங்களும் ஆயுதங்களாக அமைந்திருக்கின்றன. எண்ணம் ஓர் ஆயுதம். பேச்சு மனிதனுக்கு மற்றொரு ஆயுதம். செயல் அவனுக்கு மூன்றாவது ஆயுதம். தன்னையும் மற்றவர்களையும் உயர்நிலைக்கு எடுக்கக்கூடிய நல்ல செயலை மனிதன் செய்வானாகில் மனிதன் தான் படைத்துள்ள செயலென்னும் ஆயுதத்தை நன்கு பயன்படுத்தியவனாகின்றான். தனக்கும் மற்றவர்களுக்கும் பயன்படக்கூடியதைப் பேசுவானாகில் பேச்சு என்னும் ஆயுதத்தை மனிதன் கையாண்டவனா

கின்றான். ''உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல்'' என்ற கோட்பாட்டின்படி எண்ணுகின்ற எண்ணத்தை மேலான எண்ணங்களாக ஆக்கிவிடுவானாகில் எண்ணம் என்னும் ஆயுதத்தை நன்கு பயன்படுத்தியவனாகின்றான். பொருந்தாத செயலையோ, சொல்லையோ, எண்ணத்தையோ கையாண்டு பிறரைத் துன்புறுத்துகிற முறையில் மனிதன் நடந்து கொள்வானாகில் தன்னிடத்திலுள்ள ஆயுதங்களை அவன் முறை தவறிக் கையாண்டவனாகின்றான். அப்படிச் செய்கின்ற மனிதன் தன்னையும் பாழ்படுத்திக் கொள்கின்றான்; பிறருக்கும் தீங்கு பண்ணுகின்றான்; இறைவனுக்கும் வேற்றானாகி விடுகின்றான். மனிதன் எக்காரணத்தை முன்னிட்டும் தான் படைத்துள்ள ஆயுதங்களை முறை தவறிக் கையாளுதல் கூடாது.

இனி, ஒவ்வொரு தெய்வமும் ஆயுதம் படைத்ததாக இருக்கிறது. சிவனாரிடத்தில் திரிசூலம் என்னும் ஆயுதம் இருக்கிறது. திரிசூலத்தைக்கொண்டு சிவனார் உயிர்களுக்கு எத்தீங்கும் செய்வதில்லை. திரிசூலத்தின் உதவியால் உயிர்களிடத்திலுள்ள அக்ஞானத்தை சிவனார் ஒழித்துத் தள்ளுகிறார். குமரன் கையில் ஞானவேல் இருக்கிறது. குமரன் அந்த ஞானவேலைக் கொண்டு உயிர்களுக்கு ஞானத்தை வழங்குகின்றான். லலிதாம்பிகை அங்குசம், பாசம் என்ற இரண்டு ஆயுதங்களை உடைத்திருக்கின்றாள். உயிர்களுக்கிடையில் பாசத்தை உண்டுபண்ணி அவைகளுக்கிடையில் இணக்கத்தை ஏற்படுத்தி அவைகளைப் பராமரித்து வருகிறாள். சத்துருக்களிடத்தும் தீமையினிடத்தும் வெறுப்பை உண்டுபண்ணி உயிர்களைப் பாதுகாத்து வருகின்றாள். அங்குசம், பாசம் என்கின்ற ஆயுதங்களைப் பயன்படுத்தி உயிர்களை இங்ஙனம் பராமரித்து வருகின்றாள். அம்பிகையின் மற்றொரு கையில் கரும்பு வில்லும், இன்னுமொரு கையில் அம்பும் வைத்திருக்கின்றாள். கரும்பு மனோ தத்துவத்திற்கு விளக்கமாக இருக்கிறது. கரும்பினுடைய அடிப்பகுதி சுவையாகவும் மேலே போகப் போகச் சுவை குறைந்தும் இருக்கும். முதியோர்களுடைய மனது அனுபவம் நிறைந்ததால் பக்குவமடைந்ததாக இருக்கும். இளைஞர்களுடைய மனது அனுபவமில்லாததாகவும், பக்குவம் அடையாததாகவும் இருக்கும். முதியோர்களுடைய கருத்துக்கு நாம் மதிப்புத் தரவேண்டும் என்ற கோட்பாட்டைக் கரும்பு வில் விளக்குகிறது. பஞ்சேந்திரியங்களுக்குச் சின்னங்களாக அம்பிகையின் கையில் ஐந்து அம்புகள் அமைந்திருக்கின்றன. நல்லதையே கண்டு, நல்லதையே கேட்டு, இறை உணர்வையே ஸ்பரிசித்து, நல்லதையே நுகர்ந்து, ஈசுவரப் பிரசாதமாகச் சுவைத்துத் தெய்வ ஞாபகத்தைப் பஞ்சேந்திரியங்கள் மூலமாகப் பெற்றுவரவேண்டும் என்பதை அம்பிகை தான் வைத்திருக்கின்ற ஐந்து ஆயுதங்களால் விளக்குகின்றாள். மகாவிஷ்ணு சங்கு சக்கரங்களை உடைத்திருக்கின்றார். பிரபஞ்சத்தின் நடைமுறை முறையாக நிகழ்ந்து வருகிறது என்பதற்குச் சின்னமாக அவர் அறஆழி தாங்கி இருக்கின்றார். ஓசை ஒலியெல்லாம் அவரிடத்திருந்து வந்தன என்பதை அவருடைய சங்கு விளக்குகிறது. இறைவனுடைய மகிமைக்கென்றே மொழியைக் கையாளுவோமேயானால் ஓசை பரமனை அடைவதற்குச் சிறந்த கருவியாக இருக்கின்றது. சிவ நாமத்தை உச்சரித்தால் சிவ சொரூபம் ஆகின்றோம். நாராயண நாமத்தை உச்சரித்தால் நாராயணமயம் ஆகின்றோம். இறைவனுடைய திருநாமம் மந்திரம் என்னும் பெயர் பெறுகிறது. இறைவன் திருநாமத்தின் ஓசையைக் கையாண்டால் அது அவருடைய சாந்நித்தியத்திற்கு நம்மை அழைத்துச் செல்கிறது. அனுபூதிமான்களுடைய வாக்கு வருமாறு:

''சிவ சிவ என்கிலர் தீவினையாளர்
சிவ சிவ என்றிடத் தீவினைமாளும்
சிவ சிவ என்றிடத் தேவருமாவர்
சிவ சிவ என்னச் சிவகதிதானே.''

''குலம்தரும் செல்வம் தந்திடும்
அடியார் படுதுயர் ஆயின எல்லாம்
நிலந்தரம் செய்யும் நீள்விசும்பு அருளும்
அருளொடு பெருநிலம் அளிக்கும்
வலம்தரும் மற்றும் தந்திடும்
பெற்றதாயினும் ஆயின செய்யும்
நலம்தரும் சொல்லைநான் கண்டுகொண்டேன்
நாராயணா வென்னும் நாமம்.''

நமோ நாராயணாய, நமசிவாய என்பன மந்திரங்களாகின்றன. ராம், ராம், ஓம், ஓம் என்

பனவும் மந்திரங்களாகின்றன. மந்திரமாக இருக்கின்ற இறைவனுடைய நாமத்தை ஓதினல் மனிதன் வாக்கு என்னும் ஆயுதத்தை நன்கு கையாண்டு முழுமுதற்பொருளைச் சேரும் வல்லவனுகின்ருன்.

ஸ்ரீ கிருஷ்ணன் விபூதியோகத்தில் ''ராம: சஸ்த்ர பிருதாம் அகம்'' என்று பகர்ந்துள்ளார். ஆயுதம் தாங்கி இருப்பவர்களுக்கிடையில் நான் ராமனுக இருக்கிறேன் என்பது அதற்குப் பொருள். ராமன் என்ற சொல் இங்கு பலராமனையோ, பரசுராமனையோ குறிப்பதன்று. தசரத ராமனையே அச்சொல் குறிக்கின்றது. தசரத ராமனுக்குத்தான் அது பொருத்தமாக அமைகின்றது. ஸ்ரீ ராமன் தான் படைத்துள்ள ஆயுதத்தின் மூலமாக நமக்குச் சிறந்த செய்தியைக்கொடுக்கின்ருர். அவர்தரும் செய்தியை ஏற்று அவர் காட்டிய வழியில் நாம் ஜீவிதத்தை நடத்துவோமேயானல் நாம் பெறவேண்டிய நலன்கள் அனைத்தையும் பெறலாம். புத்திரோத்தமனென்றும், நரோத்தமனென்றும், புருஷோத்தமனென்றும், ராமனைப் பகரலாம். அத்தகைய ராமன் கோதண்டம் என்னும் ஆயுதத்தை வைத்திருக்கின்ருர். கோதண்டபாணியென்று ராமனை அழைக்கின்ேரும். தண்டபாணியென்று முருகனை அழைக்கின்ேரும். ஒரு பெரிய காரியத்துக்காக முருகன் கையில் தண்டத்தை ஏந்தியிருக்கின்ருர். இந்தத் தெய்வங்களெல்லாம் உலகத்தை உய்வித்தல் பொருட்டுத் தங்கள் ஆயுதங்களைப் பயன்படுத்தினர்கள். ராமன் தாம் பிறந்த நாள் முதற்கொண்டு வைகுண்டத்திற்குத் திரும்பிப் போகும்வரை தம் ஆயுதத்தை முறை தவறிக் கையாளவில்லை. அப்படி அவர் ஆயுதத்தைக் கையாண்ட பொழுதெல்லாம் அது வீண் போகவில்லை. ராமபாணம் ஒருநாளும் வீண்போகாது என்பது கோட்பாடு. ஆயுதம் தாங்கியிருக்கின்ற உயிர்களுக்கெல்லாம் முன் மாதிரியாகத் தசரதராமன் இருக்கின்ருர். அவர் ஆயுதத்தை எங்ஙனம் கையாண்டார் என்பதை நாம் ஆராய்ந்து பார்த்தால் விளங்கும். ஆயுதத்தை என்ன பாங்கில் கையாளவேண்டும், என்ன பாங்கில் கையாளல் ஆகாது என்பதை ராமனுடைய ஜீவிதம் விளக்குகின்றது.

ராமன் பதினறு வயது ஆவதற்குள்ளாகக் கலைகள் அனைத்தையும் கற்று விடுகின்ருர். ராமனுக்கு விவாகம் செய்து வைப்பதற்கு ஏற்பாடு செய்து கொண்டிருந்த சமயம் விசுவாமித்திரர் அயோத்திக்கு வந்தார். இராஜ சபைக்கு வந்த விசுவாமித்திரரிடம் தசரதன் பகர்ந்ததாவது: ''தாங்கள் சாதாரண அரசனுக இருந்து பேரரசன் ஆய்விட்டீர்கள். தவம்புரிந்து இராஜ ரிஷியாக மாறினீர்கள். தவத்தில் பலமுறை வழுவி மேலும் தவம் செய்து பிரம்ம ரிஷியானீர்கள். அதற்குமேல் அடையக்கூடிய பேறு இல்லை. பிரம்ம ரிஷியாகிய தாங்கள் அயோத்திக்கு எழுந்தருளியிருக்கின்றீர்கள். என் ராஜ்ஜியத்திலுள்ள அனைத்தும் தங்களுக்குச் சொந்தம்.'' இங்ஙனம் தசரதன் பகர்ந்ததும் விசுவாமித்திரர் ராமனைத் தம்மோடு சிறிது காலத்துக்கு அனுப்பி வைக்கும்படி கேட்டார். அதைக் கேட்டதும் தசரதனுக்கு உயிரே போய் விட்டது போலிருந்தது. ''தாங்கள் கேட்பதானது கண் இல்லாதவன் கண் பெற்று அதை இழப்பதற்கு நிகராக இருக்கிறது. ராமன் செய்ய வேண்டிய பணிவிடையை ராமனுக்குப் பதிலாகத் தங்களுக்கு யாவும் நான் செய்கின்றேன். ராமன் இன்னும் இளைஞுக இருக்கின்ருன். அவனல் அரக்கர்களைச் சமாளிப்பது இயலாது'' என்ருர் தசரதன். ''நீ சொன்ன வாக்குப்படி ராமனை என்னேடு அனுப்பி வை. அப்படி நீ அனுப்பாவிட்டால் நான் வெறும் கையோடு திரும்பிப் போகிறேன்'' என்ருர் விசுவாமித்திரர். வசிஷ்டர் தலையிட்டு ''தசரத மன்னனே! நீ சொன்ன சொல் தவறக்கூடாது. ராமனை விசுவாமித்திரரோடு அனுப்பி வை. ராமனுக்குக் கேடு ஒன்றும் வந்துவிடாது'' என்று கூறினர். தசரதனும் மனமிசைந்து ராமனை விசுவாமித்திரரோடு அனுப்பி வைத்தார். இலட்சுமணனும் ராமனுடன் சென்ருன். விசுவாமித்திரர் ராமனுக்குச் சிறந்த பயிற்சி அளித்தார். அந்தப் பயிற்சியை நாமும் பெறவேண்டும். வாழ்க்கையை விளையாட்டுப் போக்கில் விட்டு விடுகின்ேரும். வாழ்க்கையைப் பற்றி நாம் ஆழ்ந்து எண்ணிப் பார்ப்பதில்லை. பசி, தாகம் நம் வாழ்க்கையில் முக்கிய இடம் பெறுகின்றன. பசி, தாகத்தைச் சகித்துப் பழகுவதற்கு ராமனும் லட்சுமணனும் முதலில் பயிற்சி பெற்றனர். பசி

தாகத்தைச் சகித்துப் பழகுகின்றவளவு மனே திட்பம் உண்டாகின்றது. கடவுள் வழிபாடு செய்வதற்கு முன்பு உணவும் அருந்துவதில்லை நீரும் பருகுவதில்லை என்று சங்கல்பம் செய்து நாவை அடக்கிப் பழகவேண்டும். அப்படி நாவை அடக்கிப் பழகுவது மன அடக்கத்திற் குத் துணைபுரிகிறது. ராமனும், லட்சுமணனும் மாதக் கணக்காக உணவும், நீரும் இல்லா திருப்பதற்கு உரிய பயிற்சியை விசுவாமித்திர ரிடமிருந்து பெற்ருர்கள். விசுவாமித்திரருடைய யாகத்திற்குத் தாடகை என்னும் அரக்கி பெரிய இடையூருக இருந்தாள். அவளைச் சமாளித்து ஒழித்துத் தள்ளுகிற வல்லமை ராமனிடத்திருந்தது. ''நான் யாகம் புரியும் பொழுது மௌனத்தைக் கடைப்பிடிப்பேன். ஆயுதத்தைத் தொடமாட்டேன். ஆகையால் ராமா, நீ யாகத்துக்கு இடையூறில்லாமல் யாகம் நடக்கச் செய்யவேண்டும்'' என்று விசுவாமித்திரர் ராமனிடம் பகர்ந்தார். ராமனிடத்திருந்த ஆற்றல் பேராற்றலாகப் பரிணமிப்பதற்கு விசுவாமித்திரர் சந்தர்ப்பம் தந்தார். ராமன் அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தித் தன்னுடைய ஆற்றலை வளர்த்துக் கொண்டான். நம் அனைவரிடத்தும் தெய்வீகமும், பேராற்றலும் புதைந்து கிடக்கின்றன. தக்க சந்தர்ப்பத்தில் அவைகளைக் கையாண்டு பழகினல் நம்மிடத்தில் ஆற்றல் அதிகரிக்கிறது; பக்தி ஓங்குகின்றது; ஞானம் வளர்கின்றது.

தாடகையை வதம் செய்ய வேண்டிய நிலை முதல் முதலில் ராமனுக்கு வந்து அமைந்தது. பெண்பால் ஒருத்தியை வதைசெய்வது பொருந்துமா என்று ராமன் தயங்கினன். அப்பொழுது அவன் தயக்கத்தை விசுவாமித்திரர் குறிப்பால் அறிந்து கொண்டார். விசுவாமித்திரர் ராமனிடம் பகர்ந்ததாவது: ''பெண்பாலைக் கண்ணியமாக நடத்துவதுதான் முறை. அதுதான் நாகரிகம். ஆனல் நம்மைத் தாக்க வரும் புலி ஆண்புலியா, பெண்புலியா என்று ஆராய வேண்டியதில்லை. ஆணுக இருந்தாலும், பெண்ணுக இருந்தாலும் அதை அழித்துத் தள்ளவேண்டும். விஷப்பாம்பு ஒன்றை ஆண், பெண் என்று பார்க்காது ஒழித்துத் தள்ளவேண்டும். அத்தகைய கீழ் நிலையில் தாடகை இருக்கின்ருள். அவளைக் கொல்லுவதால் இழுக்கு ஒன்றும் இல்லை. எனவே அவள்மீது தக்க நடவடிக்கை எடுக்கவேண்டும்.'' இதில் நம்மவர்களுக்கும் பாடம் இருக்கின்றது. கேட்டை ஒழிக்காது வளரவிட்டால் நலம் ஓங்காது. முன்னேற்றத்திற்குத் தடையாய் இருப்பதை அழித்துத் தள்ளித்தான் ஆக வேண்டும்.

விசுவாமித்திரருடைய யாகம் மங்களமாக முடிந்தது. யாகம் முடிந்தபின் விசுவாமித்திரர் பகர்ந்ததாவது: ''மிதிலையில் பெரிய யக்ஞம் நிகழ்கிறது. ஆசிரம வாசிகளாகிய நாங்கள் அதைக் காணச் செல்கின்றோம். ராம லட்சுமணர்களாகிய உங்களுக்கு அழைப்பு இல்லையென்று நீங்கள் அங்கு வரத் தயங்க வேண்டியதில்லை. நீங்கள் வரச் சம்மதித்தால் நாங்கள் உங்களையும் அழைத்துச் செல்லுகின்றோம்.'' ராமன் அதற்குப் பகர்ந்ததாவது: ''நீங்கள் எங்களுக்குக் குரு. நாங்கள் உங்களுடைய சிஷ்யர்கள். மனிதனைத் தொடர்ந்து நிழல் செல்வதுபோன்று குருவைத் தொடர்ந்து சிஷ்யர்கள் போகவேண்டியதுதானே முறை. எங்கள் விருப்பத்தை நீங்கள் கேட்க வேண்டியதில்லை. உங்கள் ஆணைப்படி நாங்கள் நடந்துகொள்ளக் கடமைப்பட்டிருக்கின்றோம்.'' ராமனுடைய கூற்று அவனிடமிருந்த குரு பக்தியை விளக்குகிறது. குருபக்தி ஓங்குகின்ற அளவு சாதாரண மனிதனும் மேன் மனிதனுகின்ருன். தாய், தந்தையர்களிடம் பக்தி கொள்ளாது மேல் நிலைக்கு வந்தவர்களில்லை. ராமனிடம் தாய் தந்தையர்களிடமும் மிகுந்த பக்தி இருந்தது. இங்கு குரு சொற்படி நடந்து கொண்டான். குருவோடு சேர்ந்து ராமனும், லட்சுமணனும் மிதிலாபுரிக்குச் சென்ருர்கள். விசுவாமித்திரரை ஜனக மன்னன் பக்தி பூர்வமாக வரவேற்ருர். ''தங்களுடன் வந்திருக்கும் இரண்டு ராஜகுமாரர்கள் யார்?'' என்று கேட்டார். ''அவர்கள் தசரத குமாரர்கள்; நம்மிடம் சிறிதுநாள் பயிற்சி பெற்ருர்கள்; இப்பொழுது உம்மிடமுள்ள சிவதனுசைப் பார்க்க வந்திருக்கிருர்கள்'' என்ருர் விசுவாமித்திரர். இதற்கு மேல் விசுவாமித்திரர் பேசவில்லை. யாகம் முடிந்தபின் பலபேர் ஒன்றுகூடி சிவ தனுசைச் சபைக்குக் கொண்டு வந்தார்கள். விசுவாமித்திரர் ராமனைக் கருணையோடு

பார்த்தார். ராமன் விசுவாமித்திரருடைய பாதங்களைத் தொட்டு வணங்கினான். ராமனுடைய வழிபடு தெய்வம் சிவன்; எனவே சிவதனுசுக்கும் ஒரு வணக்கம் செய்தான். குருவின் ஆணைப்படி வில்லை வேகமாக எடுத்தான்; வளைத்தான்; ஒடித்தான். சபை முழுவதும் கரகோஷம் செய்தது. ஜனக மன்னன் பகர்ந்ததாவது: ''என்னுடைய ஞானச் செல்வியாகிய சீதை இந்த வில்லை ஒடித்த ராமனுக்குரியவளாகின்றாள்.'' சீதை கையில் மாலையுடன் வந்து ராமனுக்கு மாலையைச் சூட்டினாள். தசரதன் மிதிலைக்கு வந்தபின் ராமனுடைய விவாகம் நடந்தது.

விவாகம் முடிந்த பின் தசரதன் தம் குடும்பத்தோடும் மற்றவர்களோடும் அயோத்திக்குச் சென்றார். பரசுராமன் கோபாவேசத்தோடு வந்தார். பரசுராமரின் தந்தை ஜமதக்கினியை க்ஷத்திரியன் ஒருவன் முறைதவறிக் கொன்றுவிட்டான். அதற்காக க்ஷத்திரிய குலத்தையே அழித்துத் தள்ளிவிடுவதெனப் பரசுராமன் விரதம் எடுத்திருந்தார். எனவே அவர் கோபாவேசத்தோடு ராமன் வந்துகொண்டிருந்த திசையை நோக்கி வந்தார். அவருடைய சீற்றத்தைக் கண்டு தசரதன் நடுங்கிப்போனார். ''ராமன் ஒரு தப்பும் செய்யவில்லை. அவனை விட்டுவிடுங்கள். என்னை வேண்டுமானால் அழித்துவிடுங்கள்'' என்றார் தசரதன். தசரதனைச் சிறிதும் பொருள்படுத்தாது அவரை ஒரு கையால் அப்பால் தள்ளிவிட்டார் பரசுராமன். வசிஷ்டர் பரசுராமனின் பாதத்தைத் தொட்டு வணங்கினார். வசிஷ்டருக்குப் பிரதி மரியாதை செய்யாது அவரையும் ஒருபுறம் தள்ளிவிட்டு நேரே தசரத ராமனிடம் வந்தார். ''க்ஷத்திரியப் பதரே! ஜனகனிடமிருந்து சிவதனுசை ஒடித்துக் கயவர் கூட்டத்திலேயே நீ ஒரு வீரனாகி விட்டாய். இதோ என் கையில் விஷ்ணு தனுசு இருக்கிறது. நான் அதை உன்னிடம் தருகிறேன். அதை வளைத்து நாணேற்றுவாயாகில் பிறகு என்னோடு யுத்தம் புரியலாம். நாணேற்றத் தவறுவாயாகில் பிறகு இங்கேயே கொன்று விடுவேன்'' என்றார் பரசுராமன். தசரதராமன் பரசுராமனிடம் நடந்துகொண்ட விதம் அவரது பெருமையை விளக்குவதாக இருக்கிறது. ராமன் தலைவணங்கிப் பகர்ந்ததாவது: ''பெரியோய், அமைதி, சாந்தம், இனிமை ஆகியவைகள் தங்களைப் போன்ற சான்றோர்களைப்பார்த்து சிறியோர்களாகிய நாங்கள் கற்றுக்கொள்ளவேண்டியிருக்கத் தாங்கள் முன் கோபமும் பதை பதைப்பும் வடிவெடுத்தவராக இருந்தால் நாங்கள் அப்பண்புகளை யாரிடமிருந்து கற்றுக்கொள்வது?'' இதைக் கேட்டதும் பரசுராமனின் கர்வத்தில் ஒரு பகுதி கீழே இறங்கிவிட்டது. முதியோர்களுக்குத் தரவேண்டிய மரியாதையைத் தந்து பணிவோடும் அடக்கத்தோடும் ராமன் பேசியது ராமன் அடைந்த முதல் வெற்றியாகும். மேலும் ராமன் பகர்ந்ததாவது: ''பெரியோய், தாங்கள் க்ஷத்திரியப் பதரே! என்று அழைத்தீர்கள். யார் எக்குடியில் பிறப்பதென்பது அவரவர் தீர்மானம் பண்ணுவதன்று. க்ஷத்திரியனாகப் பிறந்திருப்பதற்கு நான் பொறுப்பாளியல்லன். அது தெய்வாதீனமாக நிகழ்ந்திருக்கிறது. தெய்வாதீனமாக நிகழ்ந்த நிகழ்ச்சியைக் கொண்டு என்னை அலட்சியப்படுத்துகின்ற பாங்கில் பேசுகின்றீர்கள். பெரியவர்கள் ஜாதியைப் பற்றிய பேச்சே எடுக்கமாட்டார்கள். தாங்கள் அதைப்பற்றிப் பேசி மற்றவர்களுக்கு முன் மாதிரி இல்லாத பாங்கில் நடந்துகொண்டீர்கள். நான் அதைப்பற்றிப் பொருள்படுத்தவில்லை. நான் அமைதியாக அதை ஏற்றுக்கொள்கின்றேன்.'' இது பரசுராமனுக்கு மற்றொரு தோல்வியாயிற்று. அயோத்திராமனுக்கு இரண்டாவது வெற்றி. இன்னும் மூன்றாவது பகுதிக்கு ராமன் வந்தான். ''என்னுடைய பராக்கிரமத்தைக் காட்டுவதற்கு நான் செயலில் இறங்கவில்லை. மிதிலையில் சிவதனுசை வளைக்கும்படி விசுவாமித்திரர் உத்தரவு போட்டார். அவர் சொற்படி அங்கு நடந்துகொள்வது எனது கடமையாயிற்று. அவருடைய உத்தரவுப்படி சிவதனுசை வளைத்தேன். அது தெய்வாதீனமாக ஒடிந்தது. இப்பொழுது பெரியோராகிய நீங்கள் உத்தரவு போடுகிறீர்கள். உங்கள் உத்தரவுக்குக் கீழ்ப்படிகின்ற முறையில் நீங்கள் தரும் வில்லைக் கையாளுகின்றேன். என்னுடைய திறமையை உங்களிடம் காட்டுவதற்காக நான் இந்த வில்லைக் கையாளவில்லை.'' இங்ஙனம் கூறி ராமன் விஷ்ணுதனுசை வாங்கினான். (தொடரும்)

# தெய்வாம்சம் பொருந்திய கிறிஸ்து

(சுவாமி விவேகானந்தர் 1900ஆம் ஆண்டில் கலிபோர்னியாவிலுள்ள லாஸ்ஏஞ்சல்ஸ் என்னுமிடத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு)

கடலில் அலை எழுகிறது. அலை எழுந்த இடத்தில் பள்ளம் ஏற்படுகிறது. மீண்டும் அதை விடப் பெரிய மற்றொரு அலை எழுகிறது. அந்த அலையும் ஒடுங்குகின்றது. இங்ஙனம் கடலில் ஓயாது அலை எழுதல், ஒடுங்குதல் ஆகிய செயல்கள் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. இயற்கையில் நிகழ்கின்ற நிகழ்ச்சிகளிலும் எழுச்சியையும், வீழ்ச்சியையும் காண்கின்றோம். நாம் எழுச்சியை மட்டும் கருத்தில் வாங்குகின்றோம். வீழ்ச்சியை மறந்து விடுகின்றோம். எழுச்சி, வீழ்ச்சி ஆகிய இரண்டும் அவசியமானவையே. அவை இரண்டும் பெரியவையே. பிரபஞ்சத்தின் இயல்பு எழுச்சியும், வீழ்ச்சியும் உடையதாகும். நம் எண்ணத்தில் உயர்வும், தாழ்வும் ஏற்படுகின்றன. சமுதாயத்தில் உயர்வும், தாழ்வும் இருக்கின்றன. ஆத்மீக உலகிலும் உயர்வும், தாழ்வும் இருக்கின்றன. உயர்வும், தாழ்வும் மாறி மாறி நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. இப்படி நிகழ்ந்து கொண்டிருப்பதற்கிடையில் உயர்ந்த இலட்சியங்கள், விரிந்த இலட்சியங்கள் முன்னேறிக் கொண்டிருக்கின்றன. மறைந்து போன நம்மோடு லயமாகிப் போன பழைய கருத்துக்களைச் சிந்தித்து அவற்றைப் பாதுகாத்து அவற்றின் மூலம் வலிவைப் பெற்று முன்னிலும் பன்மடங்கு பெரிய கருத்தலையை எழுப்பி மேலோங்கப் பார்க்கின்றோம். நாடுகளின் வரலாறும் இதே போன்றுதான் அமைந்திருக்கின்றது. நாம் ஆராயப்போகும் தெய்வாம்சமாயுள்ள மகான் தோன்றிய காலம் சமுதாயம் மிகவும் தாழ்வுற்றிருந்த காலமாகும். அவருடைய உபதேசமொழிகளிலிருந்தும், செய்திகளிலிருந்தும், ஆங்காங்குக் காணப்படும் வரலாற்றுக் குறிப்புகளிலிருந்தும் சிறிதளவு வரலாற்றுப் பகுதிகளே நமக்குக் கிடைக்கின்றன. அவருடைய உபதேசங்களையும் செயல்களையும் எழுத முற்படுவோமாயின் இவ்வுலகத்தையே அது நிரப்பி விடும். அவருடைய மூன்றாண்டு பேரியக்கத்தில் ஒரு யுகமே அடங்கியிருக்கிறது. அவ்வியக்கத்தை விரிப்பதற்கு 1900 ஆண்டுகள் வேண்டும். இன்னும் அதிக காலம் எடுத்துக் கொண்டாலும் எடுத்துக் கொள்ளலாம். உங்களைப் போலவும் என்னைப் போலவும் உள்ள சாதாரண மக்கள் சிறிய சக்தி பெற்றவர்கள். நம்முடைய சக்திகளெல்லாம் சில நிமிஷங்களில், சில மணிகளில் சில ஆண்டுகளில் செலவாகிவிடும். அதன் பிறகு நாம் இருக்குமிடம் தெரியாமல் மறைந்துவிடுவோம். ஆனால் இப்பெரியாரைக் கவனியுங்கள். பல ஆண்டுகள் கழிந்துபோயின. எனினும் அவர் இவ்வுலகத்தில் விட்டுப் போன சக்தி இன்னும் செலவழிந்து போகவில்லை. ஆண்டுகள் ஆக ஆக அச்சக்தியும் விரிந்து கொண்டே போகிறது. ஆண்டுகள் செல்லச் செல்ல அது புதிய சக்தியை உண்டுபண்ணிக் கொண்டே இருக்கிறது.

பண்டைய வாழ்வு முழுவதையும் இயேசுநாதர் வாழ்வில் காண்கின்றோம். ஒவ்வொரு மனிதனுடைய வாழ்வும் அவனுடைய பழைய வாழ்வின் தொடர்ச்சியே ஆகும். ஒவ்வொரு மனிதனுடைய வாழ்வும், பரம்பரை மூலமாகவும், சூழ்நிலைமூலமாகவும், கல்வி மூலமாகவும், பிறவியின் மூலமாகவும், அவன் வம்சத்தின் இயல்பு மூலமாகவும் அவனுக்கு வருகின்றது. இப்பூவுலகத்தில் பழைமை ஒவ்வொருவருடைய முகத்திலும் மிளிரக் காண்கின்றோம். நம்முடைய முன்னைய வாழ்வும், இப்போதைய வாழ்வும் எல்லையில்லாத இறந்த காலத்தில் உருவானதின் விளைவாகும். கால வெள்ளத்தில் நாம் அலைமோதும் சிறு அலைகளாவோம். ஓய்வில்லாது மேலும் மேலும் முன்னேக்கி நாம் வெள்ளத்தில் அடித்துச் சென்று கொண்டிருக்கிறோம். அவ்வெள்ளத்தில் நீங்களும், நானும் சிறிய குமிழிகளாக இருக்கின்றோம். அவ்வெள்ளத்தில் பெரிய ராக்ஷச அலைகளும் இருக்கின்றன. உங்களிடத்திலும், என்னிடத்திலும் கடந்த சமுதாயத்தின் வாழ்வு சிறிய அளவு உருவாகி இருக்கின்றது. பண்டைய வாழ்வு முழுவதையும் தம்மிடையே உருவாக்கிக்கொண்டு எதிர்கால வாழ்வையும் சமுதாய

வாழ்வையும் விளக்கிக்காட்டுகின்ற பெரியோர்கள் சிலர் இருக்கின்றார்கள். அவர்கள் மக்களுடைய முன்னேற்றத்தை விளக்கிக்காட்டுகின்ற கைகாட்டி மரங்களாவார்கள். உண்மையில் அவர்கள் பெரியவர்கள். நீண்டகாலம் அவர்களுடைய புகழ் உடம்பு இந்நிலவுலகிலிருக்கும். அவர்கள் என்றைக்கும் அழியாதவர்கள். "யாரும் கடவுளைப் பார்க்கமுடியாது. அவருடைய குமாரனிடத்தில்தான் அவரைக் காணலாம்." இது இயேசுநாதருடைய வாக்கு. கடவுளை மானிட வடிவில் அல்லாது நாம் எப்படிக் காணமுடியும்? நீங்களும், நானும், நம்மவர்களுள் மிக ஏழையர்களும், கீழ்நிலையில் உள்ளவர்களும் கடவுளின் தோற்றங்களேயாவோம். ஒளி அலை எங்குமிருக்கிறது. ஆனால் நமக்கு முன் அவ்வொளியைக் காண்பதற்கு விளக்கு ஏற்றிவைக்கவேண்டும். எங்கும் நிறைந்திருக்கின்ற கடவுளைக் காணமுடியாது. அவதார புருஷர்களென்னும் விளக்குகள் மூலம் அவருடைய பிரதிபலிப்பைத்தான் காணலாம். அவதார புருஷர்கள் தெய்வ சம்பத்துடையவர்கள்; கடவுளின் தோற்றங்களாகின்றார்கள்.

கடவுள் இருக்கிறார் என்று சொல்லுகிறோம். ஆனால் நாம் அவரைக் காண முடிவதில்லை; அவரை அறிய முடிவதில்லை. ஞான ஒளி பெற்ற கடவுள் அம்சம் பொருந்தியவரை எடுத்துக்கொள்ளுங்கள். நீங்கள் கடவுளைப் பற்றி இதுவரை கொண்டுள்ள இலட்சியத்தோடு அவதார புருஷருடைய குணநலத்தை ஒப்பிட்டுப் பாருங்கள். அவ் அவதார புருஷர்களுக்கு இணையாக நீங்கள் கற்பனை செய்யும் கடவுள் இருக்கமுடியாது. நீங்கள் கற்பனை செய்யும் கடவுளின் இலட்சியம் கீழானதாக இருக்கும். அவதார புருஷருடைய குணம் நீங்கள் கற்பனை பண்ணும் கடவுளைவிட மேலானதாக இருக்கும். மானுட வடிவெடுத்து வந்து ஞான அனுபவம்பெற்றுநம்முன் வாழ்ந்ததீர்க்க தரிசிகளுக்கு மேலான இலட்சிய புருஷரை நாம் கற்பனை பண்ண முடியாது. ஆகையால் அத்தகையவர்களைத் தெய்வமாக வழிபடுவதில் யாது தவறு? அத்தகையவர்களுடைய திருவடிகளில் வீழ்ந்து அவர்களைத் தெய்வமாக வழிபடுவது குற்றம் ஆகுமா? நம்முடைய கற்பனை தெய்வங்களையெல்லாம்விட அவர்கள் மேலானவர்கள் என்றால் அவர்களை வணங்குவதில் என்ன கெடுதல் வந்து விடும்? அவர்களை வணங்குவதில் ஒருவிதக் கெடுதலும் இல்லை. நம்முடைய வழிபாட்டுக்கு அவர்களை வழிபடுவதுதான் சிறந்த முறையாகும். கடவுளை அருவ நிலையில் வழிபடுவதற்கு நாம் எவ்வளவு முயன்றாலும் எந்த வழிபாட்டு முறையை நாம் பின்பற்றினாலும் நாம் மனித உலகில் மனிதர்களாக இருக்கும் வரையில் அவ்வழிபாடு மனித இயல்பை ஒட்டியதாகத்தான் இருக்கும். நாம் வழிபடும் கடவுளும் மனிதப் பண்புடையவராகத்தான் திகழ்வார். நம் வழிபாடு அத்தகையதாகத்தான் இருக்கும். கண்முன் தெரிகின்ற ஸ்தூலப் பொருள்களை ஏற்றுக்கொள்ளவும், கிரகிப்பதற்கு இயலாத, அனுகுவதற்கு மிகவும் கஷ்டமாக இருக்கும் நுண்ணியதை விட்டுவிடவும் யாரும் தயங்கமாட்டார்கள். ஸ்தூலத்தின் மூலமாகத்தான் உண்மையைக் கிரகித்தாகவேண்டும். ஆகையால் எல்லா நாடுகளிலும், எல்லாக்காலங்களிலும் அவதார புருஷர்கள் போற்றி வணங்கப்படுகின்றார்கள்.

யூதர்களுக்கிடையில் அவதார புருஷராக இலங்கும் இயேசுநாதருடைய வாழ்க்கையை நாம் சிறிது ஆராய்வோம். இயேசு பிறந்த பொழுது யூதர்களுடைய நிலை மிகக் குறுகியதாக இருந்தது. அவர்களுடைய மனம் அவர்களுக்கு அமைந்த நிலையில் கட்டுண்டு கிடந்தது. விரிந்த மனம் அப்பொழுது மக்களுக்கிடையில் இல்லை. தங்களுக்கு என்ன இருந்ததோ அதையே பற்றிப் பிடித்துக்கொண்டு அதற்கப்பால் செல்லமுடியாத மனம் படைத்தவர்களாக இருந்தார்கள். தனிப்பட்டவர்களுடைய பிரச்னையில் அவர்களுடைய மனம் அழுந்திக் கிடந்தது. மக்களின் பொதுப் பிரச்னைபற்றியும் கருத்துச் செலுத்தாது இருந்தார்கள். அவர்களுடைய வாழ்க்கை ஒரு தேங்கிய தடாகம் போலஇருந்தது. வாழ்க்கை செயலற்றதாக இருந்தது. இந்த நிலையைப்பற்றி நான் குறைகூறவில்லை. குறை கூற நமக்கு உரிமையில்லை. அத்தகைய வீழ்ச்சி இல்லாமல் இருந்திருந்தால் நாசரத்தில் தோன்றிய இயேசுநாதர் உருவெடுத்துவரும் நிகழ்ச்சி இல்லாததாகப் போயிருந்திருக்கும். பாரசீகர்கள், சாதுசியர்கள் நேர்மையற்றவர்களாக இருந்

திருக்கலாம். தகாத பல செயல்கள் புரிந்தவர்களாக இருந்திருக்கலாம். நயவஞ்சகர்களாக இருந்திருக்கலாம். அவர்களைப்பற்றி உண்மை எதுவாயினும் இயேசுநாதருடைய பிறப்புக்கு அவர்களே காரணமாவார்கள். பாரசீகர்களும், சாதுசீயர்களும் ஒருமுனையில் தள்ளும் சக்திகளாக இருந்து மற்றொரு முனையில் நாசரத்து இயேசுநாதர் என்னும் பெரிய சக்தியைத் தோற்றுவித்தார்கள்.

சமயத்துறையில் விக்ரகங்களும், விதிமுறைகளும், கிரியைகளும் இடம்பெற்றிருக்கின்றன. இவற்றில் கருத்துச் செலுத்துபவர்களைக் கண்டு நகைப்பவர்கள் சிலசமயம் தோன்றுகிறார்கள். ஆனால் அவைகளிடத்தில் வலிமை இருக்கிறது. முன்னேற்றம் என்று எண்ணிக்கொண்டு நாம் பல சமயங்களில் நம் வலிமையை இழந்துவிடுகின்றோம். பரந்த கொள்கையை விடச் சமயவெறிபிடித்தவன் வலிமை படைத்தவனாக இருக்கின்றான். மதவெறி பிடித்தவன் சக்தியை ஒன்று திரட்டும் குணம் பெற்றிருக்கிறான். பெரிய சக்தியை அவன் ஒன்று திரட்டுகிறான். தனிப்பட்ட மனிதன் சக்தியை ஒன்று திரட்டுவது போன்றுஒரு சமுதாயமும்சக்தியை ஒன்று திரட்டுகிறது. புறப் பகைவர்கள் யூதர்களைச் சூழ்ந்திருந்தனர். ரோமானிய, கிரேக்க இயல்புகள் அவர்களுடைய அறிவு உலகத்தைத் தாக்கின. அதனால் அவர்களுடைய அறிவு ஒரு மையத்தில் குவிந்தது. பாரசீகம், இந்தியா, அலெக்சாண்டரியா என்னும் நாடுகளின் படையெடுப்புகளாகிய அலைகளும் அவர்களுடைய உடலையும், உள்ளத்தையும், ஒழுக்கத்தையும் தாக்கின. அவர்கள் அத்தகைய தாக்குதல்களை எதிர்த்து நின்றார்கள். அப்படி எதிர்த்து நிற்பதற்கு வேண்டிய மாபெரும் சக்தியைப் பெற்றிருந்தார்கள். அவர்களுடைய சந்ததியார்கள் இன்றைக்கும் அந்தச் சக்தியை இழக்காதிருக்கிறார்கள். அவர்கள் தங்களுடைய சக்தி முழுவதையும் ஜெருசலத்தின் மீதும், யூத மதத்தின் மீதும் செலுத்தினர்கள். அச்சக்தி தானகப் பரவியாக வேண்டும். உலகத்தில் எந்தச் சக்தியும் ஒரு எல்லைக்குள் அடங்கி நீண்டநாள் இருக்காது. சக்திக்குப் போக்கிடம் வேண்டுமல்லவா! எந்தச் சக்தியையும் விரியவிடாது நீண்டகாலம் அணை போட்டு வைத்திருக்க முடியாது.

யூதர்களால் ஒருமுகமாகத் திரட்டப்பட்ட சக்தியானது கிறிஸ்துவமதத்தை எழுப்பி அதை விரிக்கத் தொடங்கியது. ஓடைகளெல்லாம் ஒன்று சேர்ந்து பெரும் வெள்ளப்போக்காக மாறியது. அவ்வெள்ளப் போக்கிலிருந்து பெரிய அலை தோன்றியது. அந்த அலையின் உச்சநிலைதான் நாசரத்தில் தோன்றிய இயேசுநாதராகும். இங்ஙனம் ஒவ்வொரு அவதார புருஷரும் அந்தந்தக் காலத்துக்குத் தேவையானவர்களாகத் தோன்றினர்கள். இறந்த காலத்தின்பயனாகவும், எதிர்காலத்தை உருவாக்குபவர்களாகவும் அவதார புருஷர்கள் அமைந்திருந்தார்கள். இறந்த காலத்தின் விளைவு நிகழ்காலமாகும். நிகழ்காலம், எதிர்காலத்துக்குக் காரணமாகும். இறந்த காலத்தின் விளைவாகவும் எதிர்காலத்தின் சிருஷ்டிகர்த்தாவாகவும் அவதார புருஷர் வருகிறார். அவர் எந்த இனத்தில் தோன்றினரோ, அந்த இனத்தின் சிறப்பு அம்சங்களெல்லாம் ஒன்று திரண்ட உருவமாக அவதார புருஷர் இருக்கிறார். யூத இனம் எந்த உயர்ந்த இலட்சியத்திற்காகப் பல்லூழிக்காலம் பாடுபட்டதோ அந்த உயர்ந்த லட்சியம் ஒன்று திரண்டவராக இயேசுநாதர் வந்தார். யூத இனத்தை மட்டும் அல்லாது உலகிலுள்ள பல இனத்தவர்களையும் ஆட்டி வைக்கும் புதிய சக்தியாக இயேசுநாதர் வாழ்க்கை அமைந்திருப்பதைக் காணலாம்.

நாம் மற்றொரு உண்மையையும் ஞாபகத்தில் வைக்கவேண்டும். கீழ்நாட்டாருடைய கண்கொண்டுதான் நாசரத்தில் தோன்றிய தீர்க்கதரிசியை நான் காண்பேன். நாசரத்தில் தோன்றிய இயேசுநாதர் கீழ்நாட்டார்களுக்குள் ஒருவராக இருக்கிறார் என்பதை நீங்கள் பல தடவை மறந்துவிடுகிறீர்கள். நீல நிறக்கண்கள் அமைத்தும், செம்பட்டை மயிர் கொடுத்தும் அவருடைய உருவத்தை அமைப்பதற்கு நீங்கள் பெருமுயற்சி செய்திருக்கிறீர்கள். நீங்கள் என்னதான் முயற்சி செய்து அவருடைய உருவத்தை அமைத்தபொழுதிலும் அவர் கீழ்நாட்டவரே யாவார். ஆசியாக் கண்டத்தில் தோன்றிய அவதார புருஷர் கிறிஸ்து ஆவார்.

(தொடரும்)

# ஆசிரியர்களின் ஆர்ப்பாட்டம்

நம் தேசியப்பண்பின்படி மக்களுக்குப் பயன் படுகின்ற தொழில்களனைத்தும் மேலான வைகளே. தோட்டியின் தொழிலில் துவங்கித் தேவாராதனை ஈருக எல்லாப் பணிவிடைகளும் சமுதாயத்துக்கு இன்றியமையாதவைகளே யாம். இத்தனைவித தொழில்களுள் ஆசிரிய ருடைய தொழிலில் தனி மகிமை யொன்று உளது. வீட்டுக்கு அஸ்திவாரம் ஆதாரமா யிருப்பதுபோன்று சமுதாயப் பண்புக்கு ஆசிரி யர்களுடைய அரும்பணிவிடை ஆதாரமாயிருக் கிறது. பண்பட்டுள்ள இந்தியர்கள் அவ ரவர்க்கு அமைந்துள்ள அலுவல்களைத் தேவா ராதனை போன்று ஆற்றி வரவேண்டும். அத் தகைய சீரிய மனப்பான்மையுடன் செய்யப் படும் செயல்கள் யக்ஞங்கள் அல்லது வேள்வி கள் ஆகின்றன.

ஆசிரியப் பணிவிடைக்கு வருபவர்களிடம் நான்கு சிறப்புக்கள் ஒன்றுகூடி அமைந்திருக்க வேண்டும். தாயின் அன்பு, தந்தையின் பரா மரிப்பு, ஆளுபவனுடைய ஆட்சிமுறை, ஆசிரிய னுடைய போதனைமுறை—இந்த நான்குவிதப் பண்புகளும் ஆசிரியர்களிடம் அமையுமானல் அவை நாட்டு மக்களுக்கு நல்வாய்ப்பு ஆகும். நாடு மேன்மையுற்றிருந்த காலங்களிலெல்லாம் ஆசிரியர்கள் பண்புற்றிருந்ததற்குத் தேசசரித் திரம் சான்று ஆகிறது. பழங்கால ரிஷிகளி டத்து இத்தகைய பண்புகள் அமைந்திருந்தன. ஜீவனோபாயத்தைப்பற்றி அவர்கள் சிந்தித்தது கிடையாது. அவர்களுள் உண்ணப் போதிய அளவு உணவு இல்லாது பட்டினி கிடந்தவர் களும் உண்டு; வேண்டியவாறு உணவு அகப் பட்டு உறுதி பெற்றிருந்தவர்களும் உண்டு. ஆனல் பொருளாதார நிலையைப்பற்றி அவர் கள் சிந்தித்தது கிடையாது. ஆகையால்தான் அரும்பெரும் செயல்கள் ஆற்றுதற்கு அவர்கள் தகுதிவாய்ந்தவர்களாக இருந்தார்கள்.

தௌர்பாக்கிய வசத்தால் இன்றைக்கு நாட் டில் அமைந்துள்ள ஆசிரியர்களில் பெரும்பான் மையோர் ஆசிரியப்பதவிக்குத் தகுதியற்றவர் களாம். தொழிலாளிகள், வயிற்றுப் பிழைப் புக்காகப் பலப்பல தொழில்களில் ஈடுபடுவது போன்று இன்றைக்கு ஆசிரியத் தொழிலிலும் அவர்கள் நுழைந்திருக்கிருர்கள். அதற்கேற்ற பயிற்சியை அவர்கள் பெயரளவில் பெற்றிருக் கிருர்கள். உள்ளூர அவர்களிடம் அமைந்துள்ள இயல்பு பெருமித வாழ்வில் மோகமாம்.

அரசாங்கம் இன்றைக்குக் கொடுத்து வரும் சம்பளம் மிகக் குறைந்தது என்று கூற இட மில்லை. இன்றைக்கு அமைந்துள்ள பொருளா தார நெருக்கடியைச் சமாளிப்பதற்கேற்ற சம் பளத்தையே அவர்கள் பெற்றுவருகிருர்கள்.

பாடம் புகட்டுவது போன்று மேற்பூசலாகப் பணிவிடை ஆற்றிவந்த இக்காலத்திய ஆசிரி யர்களில் பலர் மாணக்கர்களுக்கு வேலை நிறுத்தம், கிளர்ச்சி, கலவரம் முதலியவை களைப் புகட்டி வந்தார்கள். அதன் வாயிலாகப் பாடசாலைகள் பலவற்றைத் தொழில் சாலையின் கீழ் நிலைக்குக் கொண்டுவந்தார்கள். வேலை செய்யாது சம்பளம் ஏற்றுப் பிழைப்பதில் இந்தப் போலி ஆசிரியர்கள் திருப்தி அடைந் திருந்தனர். அண்மையில் அவர்கள் தாமே வேலை நிறுத்தக் கலவரங்களில் ஈடுபட்டுத் தங் கள் தரத்தை வெளிப்படுத்தியிருக்கிருர்கள். கல்விச்சாலைகளுக்குப் போகவேண்டாமென் றும், பரீட்சைகளில் கலந்துகொள்ள வேண்டா மென்றும் மாணவர்களுக்கு அவர்கள் துர்போ தனை பண்ணி வருகிருர்கள். எரிகிற தீயில் எண்ணெய் வார்ப்பது போன்று அன்னவர் களுக்கு இத்தகைய கிளர்ச்சிகளும், கலவரங் களும் ஊக்கம் ஊட்டுபவைகளாக அமைந் திருக்கின்றன. இதன் விளைவாக வந்துள்ள அலங்கோலத்தை நாடுமுழுவதிலும் இன்று காண்கின்றோம்.

கல்லூரி ஒன்றில் மாண்பில்லாத மாணக்கர் கூட்டமொன்று திடீரென்று கிளர்ச்சியொன் றைக் கிளப்பியது. கல்லூரி முதல்வரைக் கல் விக்ரஹம் போன்று நிற்க வைத்து அவரைச் சுற்றிலும் கிளர்ச்சி பண்ணும் மாணக்கர்கள் அவரைச் சூழ்ந்து கொண்டார்கள். அவரை விடுவிக்க வந்த ஆசிரியர் ஒருவரின் கன்னத் தில் மாணக்கன் ஒருவன் ஓங்கி அறைந்தான். 'நீ யாரடா இங்கு வருவதற்கு?' என்று அதட்டி னன். 'நான் இன்ன பாடம் புகட்டும் ஆசிரி யன்' என்று அவரிடமிருந்து விடை வந்தது.

'நீ ஆசிரியன் அல்லன். நீ ஓர் அம்பட்டன். கத்தி எடுத்துக்கொண்டு சிரைக்கப் போ!' என்றான் அடிகொடுத்தவன். புகட்டுபவன், புகட்டப் பெறுபவன் ஆகிய இருவருடைய பண்பு இதினின்று வெளியாகிறது. இத்தகைய பரிதாபகரமான நிலைக்கு இன்றைக்கு நம் நாட்டின் கல்வித்துறை வந்துள்ளது.

'கற்கை நன்றே கற்கை நன்றே பிச்சை புகினும் கற்கை நன்றே' என்பது பழமொழி. ஆசிரியர் உலகுக்கும், மாணவர் உலகுக்கும் பெருமித வாழ்வு உதவாது. பெருமித வாழ்வில் ஈடுபட்டிருப்பவர்கள் உள்ளத்தில் கலைமகள் வீற்றிருப்பதில்லை என்பது வெளிப்படை. ஆனால் இன்று பழக்கத்தில் இருந்து வருவது ஆடம்பரமாக உடை அலங்காரம் பண்ணுவதும் பொருந்தாத உணவு வகைகளை ஹோட்டல்களில் சென்று புசித்து ஆரோக்கிய வாழ்வைக் குலைப்பதுமாம். தூய்மையும் எளிமையும் எங்கு திகழுகின்றனவோ அங்குக்கலை இனிது விருத்தியடைகிறது என்பதும் வெளிப்படை.

தாங்கள் பெற்றுவரும் சம்பளம் தங்களுக்குப் போதாது என்று பேராசை பிடித்துள்ள போலி ஆசிரியர்கள் கிளர்ச்சி பண்ணி வருகிறார்கள். இவர்கள் கல்வியில் எத்தகைய தகுதி வாய்ந்தவர்களாகக் கல்லூரிப்பட்டங்கள் வாங்கியிருக்கிறார்களோ அதே விதத்தில் கல்லூரிப் பட்டங்கள் வாங்கியுள்ள கணக்கற்ற பேர் வேலை கிடைக்காது திண்டாடிக்கொண்டிருக்கிறார்கள். அரைவயிறு உணவுக்கும் வகையறியாது அவர்கள் வாடிக்கொண்டிருக்கின்றனர். இப்பொழுது ஆசிரியர்கள் பெற்றுவருகிற சம்பளத்தில் பாதிச் சம்பளம் கொடுத்தால் உடனே வேலை ஏற்று அல்லும் பகலும் அரும்பாடுபட அவர்கள் ஆயத்தமாயிருக்கிறார்கள். அன்னவர்களின் பரிதாபகரமான நிலையைக் கொழுத்துப் போயுள்ள இப்புல்லிய போலி ஆசிரியர்கள் எண்ணிப் பார்ப்பதில்லை. சம்பளம் இன்னும் போதாது, இன்னும் போதாது என்று போராடுகிற தொழிலாளிகளாக இவர்கள் தாண்டவமாடுகிறார்கள்.

நம் நாட்டுக்கு ஒவ்வாத இரண்டு கேடுகள் இன்றைக்கு நம்மைப் பிடித்து வாட்டுகின்றன. முதலாவது கேடாக இருப்பது கட்சிப் பிரதிகட்சியை அடிப்படையாகக் கொண்டுள்ள, சுதந்தரத்திற்குப் பிறகு புதியதாக வந்துள்ள ஆட்சிமுறை. இதன் விளைவாகப் பிணக்கும், சண்டை சச்சரவும், போட்டியும் பொறாமையும், இலஞ்சமும் மேலும் மேலும் வளர்ந்து கொண்டே வருகின்றன. நம்மைப் பிடித்துள்ள இரண்டாவது கேடு ஆங்கிலேயர் கொடுத்துள்ள, நம்மை நல்வாழ்வுக்கு உதவாத கயவர்களாகப் பண்ணும் கல்விமுறையாம். கயமை நிறைந்த கல்வித்துறையில் கயமை வாய்ந்த ஆசிரியர்களும், மாணுக்கர்களும் ஏராளமாகப் புகுந்தால் கல்வியின் கதி என்ன ஆவது? அதன் அலங்கோலத்தை இன்று நாம் கண்டு வருகிறோம். அரசியல் துறையிலும் கல்வித்துறையிலும் தீவிரமானமாறுதல் வராவிட்டால் நாடு மேலும் மேலும் அதோகதியடையும்.

வயிற்றுப் பிழைப்பை முன்னணியில் வைத்துக் கல்வியின் புனிதத்தைப் பாழ்படுத்துகிற தகாத ஆசிரியர்களை உடனடியாக ஒதுக்கித் தள்ளுதல் அவசியம். அவர்களுக்குப் பதிலாகத் தருகிற சம்பளத்தைக் கொண்டு திருப்திகரமாகக் கல்வித்துறையில் சேவை செய்யும் மக்கள் ஏராளமாக இருக்கின்றனர். அவர்களுக்குச் சந்தர்ப்பம் கொடுத்து நல்ல முறையில் பயன்படுத்தலாம். கிளர்ச்சியில் ஈடுபடுகிற மாணுக்கர்களை அப்போதைக்கப்போதே கல்விக்குத் தகுதியற்றவர்கள் என்று ஒதுக்கித்தள்ளுதல் உசிதம். கல்லூரியில் வழங்கப்பெறும் மேலாம் படிப்புக்கு நாட்டு மக்கள் எல்லாருமே தகுதி வாய்ந்தவர்கள் ஆகமாட்டார்கள். கல்வியைப் பெருக்குகிறோம் என்று அரசியல் வாதிகள் தகுதியற்றகூட்டங்களைக் கல்லூரிகளில் போட்டுப் பாழ்படுத்தி வருகிறார்கள். ஓரளவில் கல்லூரிகளின் எண்ணிக்கையையும் குறைக்க வேண்டும். இப்படித் தீவிர நடவடிக்கை எடுப்பது உசிதம். மேற்போக்கான படிப்பாளிகளாகப் பலபேர் இருப்பதைவிட ஆழ்ந்த படிப்பாளிகளாகச் சிலபேர் இருப்பார்களானால் அதினின்றே சமுதாயத்தில் நலன் அனைத்தும் உண்டாகும். போலிப் படிப்பாளிகள் பதர்க்கு நிகர். உண்மைப் படிப்பாளிகள் நன்கு விளைந்த தானியத்திற்கு நிகர். இச்செயல்களைத் தீவிரமாக அரசாங்கம் நடவடிக்கைக்குக் கொண்டு வந்தால் கல்வித்துறை ஓரளவில் புனிதம் பெறும்.

---

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம் - 113

662. अष्टमूर्ति அஷ்டமூர்தி— எட்டு விதமான வடிவங்களை உடைத்திருப்பவள் என்பது இதன் பொருள்.

அஷ்டமூர்த்தி என்னும் பதம் அம்பிகைக்கு வழங்கப்படுவது போன்று சிவனுருக்கும் வழங்கப்படுகிறது. இச்சொல்லுக்குப் பொருள்கள் பலவாறுகத் தரப்பட்டிருக்கின்றன. நிலம், நீர், தீ, காற்று, ஆகாசம், மனம், புத்தி, அகங்காரம் ஆகிய இந்த எட்டுவித வடிவங்களில் அம்பிகை இலங்குகிறுள் என்பது ஒரு பொருள். இந்த எட்டுவித வடிவங்களில் பிரபஞ்சத்தில் தோன்றியுள்ள யாவும் அமைந்திருக்கின்றன. பஞ்சபூதங்களுக்கும் மனம், புத்தி, அகங்காரம் ஆகிய அந்தக்கரண விருத்திகளுக்கும் அப்பால் உலகில் நாம் எதையும் காண்பதில்லை. ஆதலால் காட்சிக்கு வந்துள்ள யாவும் அம்பிகையின் சொரூபம் என்பது வெளிப்படை. இவை யாவையும் தெய்விக இயல்பு படைத்தவைகளாகப் பொருள்படுத்துவது நல்ல ஆத்மசாதனமாகிறது. ஜடசக்தியாக வந்திருப்பவளும் அம்பிகை. சித்சக்தியாக வந்திருப்பவளும் அம்பிகை. ஜடசக்தி சித்சக்தியாகப் பரிணமிப்பதும் சித்சக்தி ஜடசக்தியாகக் கீழிறங்குவதும் இயற்கைத் தாயின் விளையாட்டு. ஆதலால் ஜடசக்தியை அம்பிகை சொரூபமாக வைத்து வழிபட்டால் அதில் குறையேதுமில்லை. ஐம்பூதங்களும் ஐந்து விதங்களில் சிவசொரூபம் ஆகின்றன. ஆகாச பூதம், ஆகாச லிங்கமாகச் சிதம்பரத்தில் வடிவெடுத்திருக்கிறது. அந்தப் பாங்கில் அப்பரந்தபூதம் சிவசொரூபமாக வழுத்தப்படுகிறது. வாயு என்னும் பூதம், வாயு லிங்கமாக காளஹஸ்தியில் இலங்குகிறது. அக்னி பூதம் ஜோதிர் லிங்கமாகத் திருவண்ணுமலையில் திகழுகிறது. அப்புப்பூதம் அப்புலிங்கமாக ஜம்புகேஸ்வரத்தில் இடம்பெறுகிறது. பிருதிவிபூதம் பிருதிவி லிங்கமாகக் காஞ்சிபுரத்தில் அமைந்துள்ளது. ஆக ஐம்பூதங்களைச் சிவ சொரூபமாகக் கருதி வழுத்திஞலும் அம்பிகை சொரூபமாகக் கருதி வழுத்திஞலும் வழிபாட்டில் பேதமுமில்லை, குறையுமில்லை. இனி ஜடமயமாயிருக்கிற மனதைத் தெய்வபக்தி நிறைந்த மனமாகத் திருத்தியமைத்தால் வழிபாட்டுக்குரிய நல்ல கருவியாக அம்மனது அமைகிறது. புத்தியின் துணைகொண்டு தோன்றியுள்ள யாவையும் அம்பிகையின் தோற்றங்கள் எனப் பொருள்படுத்திஞல் அந்தப் புத்தி தானே தெய்வ சொரூபமாகத் திருந்தியமைகிறது. தான் அல்லாததைத் தான் எனக் கருதுவது அகங்காரம். ஜீவாத்மன் உடலைத் தாஞகக் கருதுவது அகங்காரம். ஆஞல் இந்த அகங்காரத்தை அம்பிகை வழிபாட்டுக்குப் பயன்படுத்தலாம். அம்பிகையைச் சதா ஆராதிப்பதே என்செயல் என்று தேகம் எடுத்துள்ள மனிதனெருவன் அகங்கரிப்பானேயாகில் அந்த அகங்காரம் அவனைக் கட்டுப்படுத்தாது.

லக்ஷ்மீ, மேதா, தரா, புஷ்டி, கௌரீ, துஷ்டி, பிரபா, த்ருதி ஆக இந்த எட்டுவித சக்திகள் சொரூபங்களாக அம்பிகை இலங்குகின்றுள். ஒவ்வொரு சக்தியிடத்தும் ஒருவித தெய்விக விபூதி விளங்குகிறது. அந்தந்த சக்தியைத் தனித்தனியே தியானம் பண்ணிஞல் அம்பிகையினுடைய மகிமைகள் பெரும்பாலும் இந்த அஷ்ட மூர்த்திகளின் வாயிலாக ஆத்ம சாதகனுக்கு வாய்ப்பனவாகின்றன.

ஆத்மாவின் வெவ்வேறு சொரூபங்களாகிய ஜீவாத்மன், அந்தராத்மன், பரமாத்மன், நிர்மலாத்மன், சுத்தாத்மன், ஞாஞத்மன், மகாத்மன், பூதாத்மன் ஆகிய எட்டுவிதமான அம்சங்களாக அம்பிகை இலங்குகின்றுள் என்பது கோட்பாடு. இந்த ஆத்ம சொரூபங்களை ஒவ்வொன்றுகச் சிந்தனை பண்ணிப் பார்த்தாலும் அம்பிகையின் மகாத்மியம் நன்கு வெளியாகிறது.

பூவுலகுக்கு மேலேயுள்ள நிலைகளில் இருப்பவர்களாகிய பிரம்மதேவன், பிரஜாபதி, தேவேந்திரன், கந்தர்வன், யக்ஷன், ராக்ஷன், பித்ரு, பிசாசு ஆகியவர்களின் சொரூபமாகவும் அம்பிகை இலங்குகிறுள் என்பது கோட்பாடு.

பண்புகளாகிய தயை, க்ஷமா, அனசூயை, சௌசம், அஞயாசம், மங்களம், அகார்பண்யம், அஸ்ப்ருஹை ஆகியவைகள் மயமாகவும் அம்பிகை இலங்குகிறுள்.

இயல்புகளாகிய தர்மம், ஞானம், வைராக்யம், ஐஸ்வர்யம், அதர்மம், அக்ஞானம், அவைராக்யம், அடிமைத்தன்மை ஆகியவைகள் மயமாகவும் அம்பிகை இலங்குகின்ருள்.

உடலின் கூறுகளாகிய துவக்கு, சர்மம், மாமிசம், ரத்தம், கொழுப்பு, எலும்பு, மஜ்ஜை, விந்து மயமாகவும் அம்பிகை விளங்கிக்கொண்டிருக்கிருள். அடுத்தபடி அணிமா, மகிமா, லகிமா, கரிமா, பிராப்தி, பிராகாம்யம், வசித்வம், இசித்வம் மயமாகவும் அம்பிகை இருக்கிருள்.

மேலாம் குலங்களில் பிறப்பெடுத்துள்ள பெண்பாலர்கள் எட்டு விதமானவர்களாகக் கருதப்படுகிருர்கள். அவர்கள் கணிகை, சௌண்டிகி, கைவர்த்தி, ரஜகி, தந்த்ரகாரி, சர்மகாரி, மாதங்கி, உஞ்ச்சலீ எனப் பெயர் பெற்றுள்ளார்கள். இத்தகைய பெண்பாலர்கள் மயமாகவும் அம்பிகை இலங்கிக்கொண்டிருக்கின்ருள்.

663. अजाजैत्री அஜாஜைத்ரீ — அவித்தையை வென்றவள் என்பது இதன் பொருள்.

அஜா அல்லது அஜை என்பது பிறப்பெடுக்காதது எனப் பொருள்படுகிறது. இது அக்ஞானத்தை அல்லது அவித்தையைக் குறிக்கிறது. அம்பிகை அதை வென்றிருப்பதால் அவள் அஜாஜைத்ரீ என இயம்பப் பெறுகிருள். ஓர் உபமானத்தின் மூலம் இக்கோட்பாட்டை நன்கு விளக்கலாம். இருளைச் சூரியன் வென்றிருக்கிறது. எங்கெல்லாம் சூரியனுடைய சாந்நித்தியம் இருக்கின்றதோ அங்கெல்லாம் இருளைக் காணமுடியாது. நம் போன்றவர்கள் இருளை நாள்தோறும் காண்கின்ருேம். ஆனல் திவாகரன் அல்லது நாட்களை உண்டு பண்ணுகிற சூரியனே இருளைத் தேடிக்கொண்டு எங்குச் சென்ருலும் அதை அவன் காணமாட்டான். அவன் இல்லாத இடமே இருள் சூழ்ந்தது என இயம்பப்படுகிறது. அங்ஙனம் ஞான வடிவினளாயுள்ள அம்பிகை இருக்குமிடத்தில் அக்ஞானத்துக்கு இடமில்லை. ஆதலால் அவள் அஜாஜைத்ரீ எனப் போற்றப் பெறுகிருள்.

664. लोकयात्रा विधायिनी லோகயாத்ரா விதாயினீ — உலகங்களினுடைய நடைமுறைகளைச் செலுத்த வல்லவள் என்பது இதன் பொருள்.

உலகங்கள் பதினன்கு இருப்பதாக ஐதிகம். அவைகள் மேலாம் உலகங்கள் ஏழு ஆகவும், கீழான உலகங்கள் ஏழு ஆகவும் பிரிவுபடுகின்றன. மேலாம் உலகங்கள் ஏழு ஆவன: பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், மதர்லோகம், ஜனர்லோகம், தபர்லோகம், சத்தியலோகம். கீழான ஏழுலோகங்களாவன: அதலா, விதளா, சுதளா, ரசாதளா, தலாதலா, மகாதலா, பாதாளா. இப்பதினன்கு உலகங்களைத் தோற்றுவிப்பது, நிலைபெறச் செய்வது, ஒடுக்குவது ஆகிய கிருத்தியங்களை அம்பிகை ஒழுங்காக நடாத்தி வருவதால் அவள் லோகயாத்ரா விதாயினீ எனப் பெயர் பெற்றுள்ளாள்.

665. एकाकिनी ஏகாகினீ — தன்னந்தனியளாய் இருப்பவள் என்பது இதன் பொருள்.

அண்டங்கள் அனந்தங்கோடிகளாயிருக்கின்றன. ஜீவன்களும் அங்ஙனம் எண்ணிக்கையில் அடங்காதவைகளாயிருக்கின்றன. ஜீவகோடிகளுக்கிடையில் தேவகணம், நரகணம், பூதகணம் இப்படி யெல்லாம் பிரிவுபட்டிருக்கின்றன. இத்தனைவிதத் தோற்றங்களும் வேறுபாடுகளும் அம்பிகைக்குப் புறம்பானவைகள் ஆகமாட்டா. மூலப்பொருளாகிய அவளிடத்திருந்தே இவையாவும் தோற்றத்திற்கு வருகின்றன. நிலைபெற்றிருக்கின்றன. பிறகு அவளிடத்தே ஒடுங்குகின்றன. இதற்குச் சான்று ஒன்று எடுத்துக்கொள்ளுவோம். அனந்தங்கோடி அலைகள் சமுத்திரத்தில் தோன்றி அதில் நிலைபெற்றிருந்து பிறகு அதனிடத்தே ஒடுங்குகின்றன. அத்தனைவிதமான விகாரங்களுக்கிடையில் சமுத்திரம் என்னும் நீர்ப்பரப்பு ஏகமாய் இருக்கிறது. தோற்றத்துக்கு வந்துள்ள பஞ்சபூதங்களில் ஒன்ருகிய நீரினிடத்து இத்தகைய பாங்கைக் காண்கின்ருேம். இதே கோட்பாடு தோன்றியுள்ள யாவுக்கும் மூலப்பொருளாயிருக்கிற அம்பிகையினிடத்து அமைந்திருக்கிறது. ஆகையால் இவை யாவையும் அவள் மயமாகக் காண்பது நல்ல ஆத்ம சாதனமாகிறது.

666. भूमरूपा பூமரூபா— ஒப்பு உயர்வு அற்ற பெரிய பொருளாய் வடிவெடுத்து இருப்பவள் என்பது இதன் பொருள்.

பரவஸ்துவை உபநிஷதங்கள் பூமம் என்று கூறுகின்றன. பெரிய பொருள் என்பது அதன் கருத்து. பரப்பிரம்மம் வேறு, பரா

சக்தி வேறு எனக் கருதலாகாது. சர்ப்பம் ஒன்று சுருண்டு படுத்திருக்கும்பொழுது அது பரப்பிரம்ம சொரூபம். அது வளைந்து வளைந்து போகிறபொழுது சக்தி சொரூபம். இங்ஙனம் பரப்பிரம்மத்திற்கும் சக்திக்கும் உள்ள பாங்குகளை பரமஹம்சதேவர் விளக்குகிறார். அசைகின்ற பொழுதும் அசையாதிருக்கிறபொழுதும் இருப்பது சர்ப்பமே. இந்த உபமானம் பரவஸ்துவுக்கும் பொருந்துகிறது. சிருஷ்டி அகண்டாகாரத்தில் விரிந்தோடுகிறது. அதிலுள்ள சேதன அசேதனப் பொருள்கள் எண்ணிக்கையில் அடங்காதவைகள். இத்தனைவிதமான தோற்றங்களுள் அமைப்பு வேற்றுமை உண்டு. ஒரு மணல் மணிபோன்று மற்றொரு மணல் மணி இருப்பதில்லை. ஓர் இலைபோன்று மற்றோர் இலை இருப்பதில்லை. ஒரு ஜீவ ஜந்து போன்று மற்றொரு ஜீவ ஜந்து இருப்பதில்லை. இத்தனைவிதமான வேற்றுமைகளும் ஒரே பரவஸ்துவின் எண்ணிறந்த விகாரங்களாம். ஆக வேற்றுமைகளைப் புறக்கணிக்குமிடத்து நம் அனுபவத்துக்கு வருவது பூமம். பூம வடிவினளாய் அம்பிகை இருக்கிறாள் என்பது முற்றிலும் பொருத்தமானது. நாம ரூபத்தைப் புறக்கணித்துவிட்டு அம்பிகையின் அகண்டாகார சொருபத்தைத் தியானிப்பது நல்ல சாதனமாகிறது.

667. निर्द्वैता நிர்த்வைதா—இரண்டுக்கு இடம் கொடாதவள் என்பது இதன் பொருள்.

அர்த்தநாரீசுவர சொருபத்தை நாம் அறிந்திருக்கிறோம். மாது ஒரு பாகம் ஆனவன் சிவபெருமான் என்பது அதன் பொருள். அந்நிலையில் சிவம் சக்தி என்னும் இரண்டு பொருள்கள் இருப்பதுதானே உண்மை என்று நாம் நினைக்கலாம். பெயரளவில் சிவம் வேறு சக்தி வேறு. அக்னியினிடத்திருந்து அதன் உஷ்ணத்தை நாம் எப்படிப் பிரித்தெடுக்க முடியாதோ அதேவிதத்தில் அண்டத்திலிருந்து அம்பிகையைப் பிரிக்க முடியாது. அண்ணலும் அம்பிகையும் நிர்த்வைதம் இரண்டற்ற பொருள் எனக் காண்பதே மெய்ப்பொருள் காட்சியாகும்.

668. द्वैतवर्जिता த்வைத வர்ஜிதா — எக்காரணத்தை முன்னிட்டாவது இரண்டாவது வஸ்துவைக் காண இடம் தராதவள் என்பது இதன் பொருள்.

வேற்றுமையாக வடிவெடுத்திருப்பது சிருஷ்டி யென்பதும், வேற்றுமையற்ற நிலை பிரளயம் என்பதும் கோட்பாடு. பிரளய நிலையில் த்வைத வர்ஜிதா என்று அம்பிகையைப் பற்றி இயம்பலாம். சிருஷ்டி நிலையில் அம்பிகையை த்வைத வர்ஜிதா எனபொருள்படுத்துவது பொருந்தாது என நாம் எண்ணக்கூடும்.

பூதங்களில் ஒன்றாகிய நீர் ஆனது கடல் நீர் என்றும், ஆற்றுநீர் என்றும், ஊற்று நீர் என்றும், மழை நீர் என்றும், கேணி நீர் என்றும், குட்டை நீர் என்றும் பெயர் பெறுகின்றது. இதே நீர் என்னும் வஸ்து சூட்சுமநிலை எய்துமிடத்து ஆவியென்றும், மேகம் என்றும், மஞ்சு என்றும், மூடுபனி என்றும் வடிவங்கள் எடுக்கிறது. அதே வஸ்து உறைகின்றபொழுது ஆலங்கட்டி என்றும், கல்மாரி என்றும், உறைபனி என்றும், கெண்டைப்பனி என்றும் பெயர் பெறுகின்றது. இத்தனைவித நிலைகளுள் ஒருநிலையிலிருக்கிற நீரை இன்னொரு நிலையில் வைத்துக் கூறலாகாது. அப்படிக் கூறுவது சொல் ஆட்சிப் பிழையாகும். சொல் ஆட்சி பிழை போகாது இருப்பதற்கு த்வைதசம்ப்ரதாயம் உதவுகிறது. ஆனால் மெய்ப்பொருளாராய்ச்சிக்கு வருகிறவிடத்து இவை யாவையும் அப்பு என்று பொருள்படுத்துவதே முறை. அப்படிப் பொருள்படுத்துகிறவிடத்தில் அது துவைத வர்ஜிதமாக இருக்கிறது.

சூடாமணி என்றும், ஜடைவில்லை என்றும், கம்மல் என்றும், கடுக்கன் என்றும், காசுமாலை என்றும், காப்பு என்றும், மோதிரம் என்றும், ஒட்டியாணம் என்றும், கொலுசு என்றும் ஆபரணங்கள் பல இருக்கின்றன. ஒரு வடிவத்துக்கு அமைந்திருக்கிற பெயரை மற்றொரு வடிவத்துக்குத் தரலாகாது. ஆக ஆபரணங்கள் துவைத நிலை அல்லது பன்மை நிலை எய்துகின்றன. இத்தனைவித ஆபரணங்களுக்கு மூலப்பொருளாயிருப்பது தங்கம். அதைப் பொன்னெனப் பொருள்படுத்துமிடத்து துவைதம் அடிபட்டுப் போகிறது.

அம்பிகையைப் பரதேவதையாகப் பொருள்படுத்துமிடத்து அவளுக்கு அன்னியமாக வஸ்து இல்லை. ஆதலால் அவளை த்வைத வர்ஜிதா என்றுதான் இயம்பவேண்டும்.

# ஸத் ஸம்பாஷணை

**கேள்வி: (158) மகாபாரத வரலாறு இல்லாது பகவத்கீதை தன்போக்கில் வடிவெடுத்திருந்தால் அது வெறும் ஆகாயக் கோட்டையாகப் போயிருந்திருக்கும். பகவத்கீதையில்லாது வெறும் மகாபாரத வரலாறு மட்டும் அமைந்திருந்தால் அது பொழுதுபோக்குக்கான கதையாக முடிந்திருக்கும். ஆனல் கீதையும் பாரதப் போரும் சேர்ந்தே அமைந்திருப்பதால் தான் இரண்டுக்கும் மதிப்பு வந்துள்ளது எனச் சிலர் கருதுகின்றனர். இக்கொள்கை சரிதானு?**

இக்கொள்கை சரியன்று. ஓர் உபமானத்தின் மூலம் விஷயத்திற்கு வருவோம். வாழை, பலா, மா ஆகிய முக்கனிகள் இருக்கின்றன. ஐதிகமாக இம் முக்கனிகள் மதிப்பு மிகப் பெறுகின்றன. கடவுள் நைவேத்தியத்திற்கும் மக்கள் உணவுக்கும் இம் மூன்று கனிகள் நன்கு பயன்படுகின்றன. இம் மூன்று கனிகளைத் தோற்றுவித்துள்ள மரங்களுள் மாமரமும், பலா மரமும் கட்டடங்கள் அமைப்பதற்கும், தட்டு முட்டுச் சாமான்கள் செய்வதற்கும் நன்கு பயன்படுகின்றன. வாழை மரமோ உண்பதற்கு இலையும், வேறுபல காரியங்களுக்கு மட்டைகளும் தந்து உதவுகிறது. வாழை மரத்தில் எப்பகுதியும் வீண் போவதில்லை. பழம் தராது வாழைமரம் அமைந்திருந்தாலும் அதில் பிரயோஜனம் ஏராளமாக உண்டு. அதே விதத்தில் பழங்கள் தாராது பலாவும், மாமரமும் நிழலுக்கு உதவுகின்றன. கடைசியில் மரச்சாமான்களாக வடிவெடுக்கின்றன. ஆக, பழங்கள் ஒரு போக்கில் பயன்படுகின்றன. அவைகளை உண்டுபண்ணிய மரங்கள் மற்றொரு போக்கில் பயன்படுகின்றன. மரங்களில்லாது இப்பழங்கள் ஏதோ ஒரு விதத்தில் வந்து வாய்த்தன என்று வைத்துக்கொண்டாலும் அவைகளின் பயனுக்குப் பழுதுஏதும் வாராது. ஆனல் இயற்கையின் அமைப்போ மரங்களும் அவைகளினின்று உண்டாகிற பழங்களும் இணைபிரியாது இருக்கின்றன. தத்தம் போக்கில் அவைகள் நன்கு பயன்பட்டும் வருகின்றன.

மகாபாரத வரலாற்றை அறிந்து கொள்ளாமலேயே மேல் நாட்டவர்கள் பலர் கைகளுக்குப் பல்லாண்டுகளுக்கு முன்பு பகவத்கீதை எட்டியிருக்கிறது. அதை ஆராய்ந்த அறிஞர்கள் தங்களுடைய வாழ்க்கையையே இனிது திருத்தியமைத்துக்கொண்டனர். மகாபாரத நூலின் ஒரு சிறுபகுதி பகவத்கீதை என்னும் உண்மையை அவ்வறிஞர் அறிந்திலர். ஆயினும் அவர்களுடைய வாழ்க்கையைப் பெரு வாழ்க்கையாக மாற்றியமைப்பதற்குப் பகவத்கீதை உறுதுணையாயிற்று.

இந்தியாவில் மயக்கம் நிறைந்த இந்நாளிலும் மகாபாரத வரலாற்றைப் பக்தியுடன் படிக்கிறவர்கள் பலபேர் இருக்கின்றனர். அன்னவர்களில் பலர் பகவத்கீதையைப் பற்றி ஒன்றுமே அறிந்திலர். ஆயினும் மகாபாரதக் கதை அவர்களை நன்மக்களாகத் திருத்தியமைப்பதற்குப் பேருதவி புரிந்து வருகிறது. பரத கண்டம் முழுதிலும் பாரதக் கதை படிப்பதின் வாயிலாக அறநெறியைச் சார்பவர்கள் எண்ணிறந்த பேர் இருக்கின்றனர்.

மகாபாரதம் என்னும் கனியினின்று பிழிந்தெடுத்த சாறு போன்றது பகவத்கீதை. பகவத்கீதை என்னும் வாழ்க்கைத் தத்துவ நூலுக்குப் பரந்த வியாக்கியானமாக அமைந்திருப்பது மகாபாரத வரலாறு. பகவத்கீதை சாஸ்திரத்தையும் மகாபாரத இதிகாசத்தையும் இணைத்துப் படித்து ஆராய்ச்சி செய்வது ஒப்பு உயர்வு அற்ற படிப்பு முறை என்பது சொல்லாமலே விளங்குகிறது. ஆயினும் பகவத்கீதை என்னும் சாஸ்திரத்திலிருந்து மகாபாரதம் என்னும் இதிகாசத்தைப் பிரித்தெடுத்தால் இரண்டும் பொருளற்றவைகளாகப் போய்விடுகின்றன என்பது உண்மையன்று. மனிதனுக்கு இரண்டு கால்கள் இருக்கின்றன. ஒரு காலை ஒடித்து விட்டால் மற்ற கால் பயன்படாது போகிறது. அந்தப் பாங்கில் அமைந்தவைகள் அல்ல மகாபாரதக்கதையும், பகவத்கீதையும். சர்க்கரை தன் போக்கில் பயன்படுகிறது. தேன் தன் போக்கில் பயன்படுகிறது. ஒன்றன் பயன் மற்றொன்றைச் சார்ந்ததன்று. ஆயினும் சர்க்கரையையும், தேனையும் இணைத்துப் பெருமைப்படுத்துகின்றபொழுது சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி பொழிந்தது

போல் இருக்கிறது என்று இயம்புவர் உலகத்தவர். சர்க்கரைப் பந்தலுக்கு நிகராகப் பரந்த பாங்கில் அமைந்திருக்கிறது மகாபாரதம். அதில் தேன்மாரி சொட்டுவது போன்று அமைந்திருக்கிறது பகவத்கீதை. இரண்டு பகுதிகளும் தன் தன் போக்கில் மக்களுக்கு இனிது பயன்பட்டு வருகின்றன. அவைகளிரண்டும் இயல்பாகவே இணைந்திருப்பதால் அவைகள் இரண்டையும் இணைத்து வைத்து ஆராய்ச்சி பண்ணுகிறவர்கள் பெரும்பயன் அடைவார்கள் என்பது திண்ணம். தனித்திருந்தும், இணைந்திருந்தும் அவ்விரண்டு நூல்கள் மக்களுக்கு எக்காலத்திலும் பயன்படும். அவைகளைப் பிரித்து வைத்தால் இரண்டும் வெறுமனே பயன்படாது போய்விடும் என்பது உண்மையன்று.

**கேள்வி: (159) அன்னை சாரதை 'ராதையை யார் கவனிப்பார்கள்?' என்று தன் இறுதிக்காலத்தில் நினைத்ததாக ரா. கணபதி 'அம்மா' என்ற புத்தகத்தில் குறிப்பிடுகின்றார். அன்னையைப் போன்றோர் அப்படி நினைக்கலாமா?**

சான்றோர் சரித்திரங்களை எழுதுதற்குத் தவசிகளே தகுதி வாய்ந்தவர்களாகின்றனர். தவம் புரியாது வெறும் எழுத்தாளர்களாக அமைகிறவர்கள் உலக விஷயங்களைப்பற்றி எழுதலாம். ஞானியர்கள் வரலாற்றை நூலாக அமைக்க அவர்கள் முற்படலாகாது. உலகத்தவர்களைக் குறித்து ஒரு உபமானத்தின்மூலம் பரமஹம்சர் பகருகிறார். வெங்காயம் சாப்பிட்டவன் ஏப்பமிட்டால் வெங்காய நாற்றம் வெளியாகும். அங்ஙனம் உலக ஆசைகளுள் உழன்று கிடப்பவன் பாரமார்த்திகத்தைப் பற்றிப் பேசினால் அப்பாரமார்த்திகத்தை அவன் உலக வியவகாரமாக மாற்றிவிடுவான். அதற்குச் சான்றாக ரா. கணபதி எழுதிய 'அம்மா' என்ற புத்தகத்தைச் சொல்லலாம்.

சாரதாதேவியாரின் அந்திய காலம் அணுகியபொழுது அவர் ராதை என்னும் தமது தம்பியின் புதல்வியை அவள் பிறந்த கிராமத்துக்குத் திருப்பி அனுப்பிவிட்டார். பொழுது போக்குக்காகவென்று இடைக்காலத்தில் அப்பெண்ணை அன்னையார் பேணி வந்தார். இறுதிக்காலத்தில் பரத்தில் லயமாவதற்கு அவர் தம்மை ஆயத்தப்படுத்தியபொழுது துறவியர் கூட்டமே அவரைச் சூழ்ந்திருந்தது. சாரதாதேவியார் நோய்வாய்ப்பட்டிருந்த உடலுக்குத் தாம் புறம்பானவர் என்பதற்குப் பெருவிளக்கமாகத் திகழ்ந்தார். உடலை உகுக்க அன்னையார் ஆயத்தப்படுத்தியதைப் பார்த்து வருந்திய அன்னபூர்ணாவை அழைத்து அன்னை இயம்பியதாவது: 'உலகில் யாருமே உனக்கு வேற்றார் அல்லர். அனைவரையும் உற்றாராக உணருவது முறை. நீ எதைக் குறித்தும் வருந்துதற்கு இடம் இல்லை.' இதுவே அன்னையார் உலகுக்கு இட்ட இறுதிச் செய்தி. இது எவ்வளவு கம்பீரமானது. இதில் பர தத்துவம் எவ்வளவு புதைந்திருக்கிறது? இதற்கு மாறாக மேலே மொழிந்துள்ள சொல்லில் புன்மையும், அக்ஞான இருள் சூழ்ந்த உலகப்பற்றும் எவ்வளவு தூரம் ஊறிக்கிடக்கின்றன என்பது சொல்லாமலே விளங்குகிறது.

உலக வாழ்க்கையைப் பற்றிய உண்மையொன்று உண்டு. ஒவ்வொரு ஜீவனும் அவனவனுடைய கர்மத்தைச்செய்து முடிக்க உலகில் வந்து பிறக்கிறான். ஒவ்வொரு ஜீவனுக்கும் உற்றார் உறவினராக வருகிறவர்கள் தங்களுடைய வினைகளை நிறைவேற்றுவதற்கென்றே பிறப்பெடுக்கின்றனர். உதவி பண்ணுகின்றவன் உதவி பண்ணுவதன் வாயிலாகத் தன் வினையைப் பூர்த்தி பண்ணுகிறான். உதவியை ஏற்பவன் அதன் வாயிலாகத் தன் வினையை நிறைவேற்றுகிறான். தாய் தந்தையர்களாக வருபவர்களுக்கும் மகப்பேறுகளாக வருபவர்களுக்கும் இந்த உண்மை பொருந்துகிறது. குழந்தை பிறந்தவுடன் பெற்றவள் மடிந்து போனால் அதை முன்னிட்டுப் பிறப்பெடுத்த குழந்தை பட்டினி கிடந்து சாவதில்லை. அதைப் பேணுதற்கு ஏற்ப மற்றவர்கள் தாமாக வந்து வாய்க்கின்றனர். ஆதலால் ஒரு ஜீவனுடைய ஆதரவை எதிர்பார்த்து மற்றொரு ஜீவன் உலகத்தில் பிறந்து வந்ததன்று. இந்த அடிப்படை உண்மை சாதாரண விவேகிகளுக்கே தெரிந்திருக்கிறது. அப்படியிருக்கத் தாம் உடலைத் துடைத்த பிறகு ராதையை யார் காப்பாற்றுவார்கள் என்று அன்னையார் வருந்தினர் என்றால் பாமரர்களுள் அவர் கடைப்பட்ட பாமரர் ஆவார். இது தத்துவத்துக்குப் பொருந்தாது.

# திருவாசகத்தில் ஒரு பாடல்

( சுவாமி ஆத்மானந்தர் )

ஆமாறுன் திருவடிக்கே
அகங்குழையேன் அன்புருகேன்
பூமாலை புனைந்தேத்தேன்
புகழ்ந்துரையேன் புத்தேளிர்
கோமானின் திருக்கோயில்
தூகேன்மெழுகேன் கூத்தாடேன்
சாமாறே விரைகின்றேன்
சதுராலே சார்வானே.

இது திருவாசகப் பாடல். சைவ சமயக் கொள்கைப்படி ஜீவர்கள் அனைவரும் பசுக்கள். சிவபெருமான் ஒருவனே பதியாவான். அதனால் சிவன் 'பசுபதி' என்று அழைக்கப்படுகின்றான். சிவனருக்கமைந்த எண்ணிறந்த நாமங்களுள் 'மகாதேவன்' என்பதும் ஒன்று. 'தேவாதி தேவன்' என்றும் அவன் அழைக்கப்படுகின்றான். தேவர்கள் அனைவரும் தங்கள் தலைவனாக ஒப்புக்கொண்டமையால் இங்கு, 'புத்தேளிர் கோமான்' என்று அழைக்கப்படுகின்றார்.

தேவர்கள் ஒருமுறை தங்களது மேன்மையைக் குறித்து இறுமாப்புறுகின்றனர். அகங்கார மமகாரத்திற்கு ஆட்படுகின்றனர். தங்களின் மிக்கார் யாருமில்லை என்று செருக்குறுகின்றனர். அவர்களது ஆணவத்தை அகற்ற விரும்பிய சிவனர் அவர்கள் முன்னிலையில் ஒரு யக்ஷவடிவம் கொண்டு தோன்றுகின்றார். அக்னி, வருணன், இந்திரன் முதலியோர் அந்த யக்ஷ வடிவத்தை இன்னரென்று அறிய முயன்று தோல்வியுறுகின்றனர். அந்த யக்ஷன் இட்ட துரும்பை அவர்களால் எரிக்கவோ, அசைக்கவோ, அழிக்கவோ இயலாது திரும்புகின்றனர். இறுதியில் அவர்கள் முன்னிலையில் அம்பிகை தோன்றி, அந்த யக்ஷவடிவம் ஈசனுடையதென்றும்; வெற்றியனைத்திற்கும், மேன்மையனைத்துக்கும் அவரே காரணமாவார் என்றும் அறிவுறுத்துகின்றாள். உண்மையை உணர்ந்த தேவர்கள் செருக்கொழிந்து இறையருளுக்குப் பாத்திரராகின்றனர். இவ்வரலாறு கேனோபநிடதத்தில் இடம் பெற்றிருக்கின்றது.

'திரு' என்பது செல்வத்தைக் குறிக்கும். தன்னை அடைந்தார்க்கு அருட் செல்வத்தையும் ஞானச் செல்வத்தையும் ஒருங்கே தரவல்லது இறைவனடி யாதலால் அது 'திருவடி' என்று போற்றப்படுகின்றது. சாதாரணமாக மாந்தரது அடிகளைத் திருவடி என்று போற்றுவதில்லை. இறைவனடியையே 'திருவடி' என்றும், 'திருப்பாதம்' என்றும் போற்றுகின்றோம்.

மானுட அமைப்பில் தலை பிரதானமாக இருக்கின்றது. 'எண்சாண் உடம்பிற்குத் தலையே பிரதானம்' என்பது உலக வழக்கு. ஆனல் ஈசனுடைய அமைப்பிலோ திருவடிகள்தாம் பிரதானமாக இருக்கின்றன. பக்தர்களுக்கு முக்தியைத் தரவல்லது ஈசன் திருவடியேயாம். பிறவிப் பெருங்கடலைத் தாண்டுதற்குரிய தெப்பமாக இருப்பதும் ஈசன் திருவடியேயாம்.

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்

என்பது மறைமொழி.

முக்தியைத் தரவல்லது தூக்கிய திருவடியாம். மணிவாசகரும் "மெய்யே உன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்" என்கின்றார். முக்தியைப் பெற விரும்புவோர் ஈசனது திருவடியை மறவாதிருத்தல் வேண்டும். பக்தர் ஈசனிடத்து அவன் திருவடியை மறவாதிருக்கும் வரத்தையே வேண்டுகின்றனர்.

"புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி என்மனத்தே
வழுவாதிருக்க வரந்தர வேண்டும்இவ் வையகத்தே"

என வேண்டுகின்றார் அப்பர் பெருமானர்.

உலகத்துப் பொருட்கள் எதற்கும் அடிமையாகாமல் இறைவன் திருவடிக்கு மட்டுமே அடிமையாதல் குறிக்கோளாதலின் 'திருவடிக்கே' என்றார். ஆண்டவனது திருவடிக்கு மட்டும் தங்களை அடிமையாக்கிக் கொண்டவர்களையே அடியார்கள் என்று கூறவேண்டும். மக்கள் உலகப் பொருட்கள் பலவற்றிற்கு அடிமைகளாகிக் கிடக்கின்றனர். பொன்னுக்கும் பொருளுக்கும், பட்டம் பதவிகளுக்கும், அடிமைகளாகிக் கிடக்கின்றனர். ஈசனுக்கு அடியவரானவரைக்

காணுதல் அருமையினும் அருமையாக இருக்கின்றது. தொண்டரின் லக்ஷணத்தைப் பெரிய புராண ஆசிரியர் சேக்கிழார் பெருமான் படம் பிடித்துக் காட்டுகின்ருர்.

"நின்ருலும் இருந்தாலும் கிடந்தாலும் நடந்தாலும்
மென்ருலும் துயின்ருலும் விழித்தாலும்
இமைத்தாலும்
மன்ருடும் மலர்ப்பாதம் ஒருகாலும் மறவாமை
குன்ருத உணர்வுடையார் தொண்டராம்
குணமிக்கார்."

எத்தொழில் செய்தாலும் தொண்டனின் மனம் ஈசன் திருவடியிலேயே புதைந்து கிடக்கும். சதா தெய்வச் சிந்தனையில் ஊறியிருப்போர், சதா தெய்வத்தைப் பற்றித்தான் பேசுவர். அவர்களுடைய செயல்களும் தெய்விகம் பொருந்தியவைகளாகத்தாலிருக்கும். இங்ஙனம் தங்களது உடல், பொருள், ஆவி அனைத்தையும் இறைவனுக்கென்றே அர்ப்பணித்தவர்களை உலகத்தவர் உள்ளபடி அறிந்துகொள்ள மாட்டார்கள். பக்திப் பித்துக்கொண்ட அந்த முக்தர்களை மக்கள் பித்தர் என்றே பேசுவர். அந்த முக்தர்களோ உலகத்தவரைப் பித்தர் என்று பதிலுக்கு ஏசுவர்.

"நாடவர் நந்தம்மை ஆர்ப்ப ஆர்ப்ப
நாமும் அவர்தமை ஆர்ப்ப ஆர்ப்ப"

என்கிருர் மணிவாசகர்.

"பேயரே எனக்கு யாவரும் யானும் ஓர்
பேயனே எவர்க்கும் இது பேசி என்
ஆயனே! அரங்கா! என்றழைக் கின்றேன்
பேயனுய் ஒழிந்தேன் எம்பிரா னுக்கே"

என்பது ஆழ்வார் பாடல்.

ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சரை அக்காலத்தவர் பைத்தியக்காரர் என்றனர். ஆனல் அவரோ உலகத்தவரைப் பைத்தியக்காரர் என்று பதிலுரைத்தார். "மக்களுள் பெரும்பாலோர் பொன்னிலும் பொருளிலும், பட்டம் பதவியிலும், மண்ணிலும் பெண்ணிலும் பைத்தியம் பிடித்தவர்களாய் இருக்கின்றனர். நானே கடவுள் பைத்தியம் கொண்டவனுய் இருக்கின்றேன். மற்ற பைத்தியங்களைக் காட்டிலும் கடவுள் பைத்தியம் மேலானது" என்ருர். ஒருவனைப் பைத்தியக்காரன் ஆக்குவது சுலபம். ஆனல் ஒரு மனிதனைக் கடவுள் பைத்தியம் பிடித்தவனுக்குவது சுலபமான காரியமன்று. நம்மைக் கடவுள் பித்தம் பிடித்தவனுக்குவது கடவுள் கையில்தான் இருக்கின்றது. நம்முடைய முழுமுயற்சியும் அதற்கு இன்றியமையாததாகும். நாம் வேண்டுவதைத்தான் ஈசன் நமக்கு எடுத்து வழங்குகின்ருர். கடவுள் பித்தம் பிடிக்க வேண்டுமென்று பிரார்த்திக்கவேண்டும்; தெய்வப்பித்தைப்பெற வேண்டுமென்று அழவேண்டும். அத்தகையவர்களுக்குத்தான் பக்தி மேலிட்டுக் கடவுள் பித்தம் தலையெடுக்கும்.

திரிகரணங்களை உடையவன் மனிதன். தொண்டனுக விரும்புவோன் மனம், மொழி, மெய் ஆகிய மூன்றையும் இறைத்தொண்டில் ஈடுபடுத்தவேண்டும். மூன்று கரணங்களுள் மனம் ஈடுபடாத இடத்து ஏனைய மொழியும் மெய்யும் பயன்படாது போய்விடும். வழிபாட்டில் மனம் ஒன்றுதல் இன்றியமையாததாகும். அங்ஙனம் மனம் கசிந்து பிரார்த்திக்கவில்லையே என்பதைப் புலப்படுத்த "அகங்குழையேன் அன்புருகேன்" என்கின்ருர்.

குழைதல்—இளகுதல். உள்ளம் இளகுதல் பல காரணங்களால் நிகழக்கூடும். ரோகத்தினுலும், போகத்தினுலும் உடல், உள்ளம் ஆகிய இரண்டும் இளகுதலும் உருகுதலும் உண்டு. நோயில் அழுந்திக்கிடப்பவன் ரோகியாகின்ருன். ரோகி துன்பத்தைத் தவிர இன்பத்தை அனுபவிப்பதில்லை. போகி சிற்றின்பப் பிரியனுய் இருக்கின்ருன். பஞ்சேந்திரியங்கள் மூலம் பெறப்படுகின்ற இன்பம் சிற்றின்பம் எனப்படுகின்றது. அவை நிலைத்த இன்பத்தைத் தருவதில்லை. இன்பமாகத் தொடங்கித் துன்பமாக முடிவது போகி அனுபவிக்கின்ற இந்திரிய இன்பம். இந்திரியங்கள் மூலம் இன்பத்தை அனுபவிக்கும் போதும் உள்ளம் உருகுகின்றது. ஆனல் அந்த உருக்கம் மனிதனைச் சிறுகச் சிறுகத் தேய்த்து அழிக்கின்றது. மக்களுள் பெரும்பாலோர் போகிகளாகத்தான் இருக்கின்றனர். "மனைவி மக்களுக்காகக் குடம் குடமாகக் கண்ணீர் வடிப்பர். ஆனல் ஈசனுக்காகவென்று ஒரு சொட்டுக் கண்ணீரும் சிந்தார்." என்று ஸ்ரீராமகிருஷ்ணர் கூறுவதுண்டு.

யோகி அனுபவிக்கின்ற ஆனந்தம் போகி அனுபவிக்கின்ற ஆனந்தத்தைப் போன்ற

தன்று. தொடக்கத்திலும், இடையிலும், முடிவிலும் யாண்டும் பேரானந்தத்தைத் தரவல்லது யோகம். அந்தப் பரமானந்தத்தோடு உலகம் தருகின்ற இன்பம் எதனையும் ஒப்பிட முடியாது. அந்தப் பரமானந்தத்தைச் சுவைத்த அப்பர் பெருமான் அதன் இனிமையை,

"கனியினும் கட்டி பட்ட கரும்பினும்
பனிமலர்க் குழல் பாவை நல்லாரினும்
தனிமுடி கவித்தாளும் அரசினும்
இனியன் தன்னடைந்தார்க்கு இடைமருதனே"

என்கின்றார்.

உள்ளம் உருகுதற்கு முதலில் குழைதல் வேண்டும். அக்குழைவு இறைவனிடத்து இடையறாது அன்பு செலுத்துதலாலும், அவ்விறைவன் திருவடிகளை இடையறாது நினைவு கூர்தலாலும் நிகழவல்லதாகும். நாம் யாரிடத்து அன்பு செலுத்துகின்றோமோ அவரை அடிக்கடி நினைக்கின்றோம். அந்நினைவு இடையறாத நினைவாகும்போது உள்ளம் இளகி உருகத் தொடங்கிவிடுகின்றது. கருங்கல் போன்ற மனமும் கனிந்து உருகுதற்கு இறைவனைப் பற்றிய இடையறாச் சிந்தனைதான் இன்றியமையாததாகும். இறைவனைப்பற்றிய நினைவு முதிர்ந்து ஆழ்ந்ததாவதற்கேற்ப இறைவன் நமது நெஞ்சத்தை ஆட்கொள்ளத் தொடங்கிவிடுகின்றான். "ஓயாதே உள்குவார் உள்ளிருக்கும் உள்ளானை" என்கிறார் மணிவாசகர். ஆதலால் முதலில் இறைவனைநெஞ்சில் நினைக்கவேண்டும். அந் நினைவே உள்ளத்தை இளக்கி உருகச் செய்கிறது. தெய்வீகப் பேரானந்தத்தைப் பெறுதற்கு உள்ளத்தின் தூய செயல்களாகிய குழைதலும் உருகுதலும் இன்றியமையாதவை. அவற்றை அடைந்திலேன் என்று இரங்குகின்றவராக 'அகங்குழையேன் அன்புருகேன்' என்கின்றார் மணிவாசகர்.

மலர் தூயதாயும் மென்மை உடையதாயும் இருக்கின்றது. பக்தனது மனம் தூயதாயும் மென்மை வாய்ந்ததாயும் இருத்தல் வேண்டும். மானுட மனத்தின் புறச்சின்னமே மலர். பக்தன் தனது மனதாகிய மலரை இறைவன் திருவடிக்கு அர்ப்பணிக்க வேண்டும். மலர் அநித்தியமானது ; காலையில் மலர்ந்து மாலையில் வாடிப்போகின்றது. ஆயினும் ஈசனுக்கு அர்ப்பணிப்பதற்கு அது மிகவும் ஏற்றதாகின்றது. மலர்மாலை அணிவித்து வாழ்த்துதலில் பக்தனது மனத்தகத்துப் பக்தி வளருகிறது. அன்பினோடு அணிவிக்கும் மலர் மாலையில் ஈசன் திருப்தியடைகிறான். அதனை ஈசன் திருப்தியோடு ஏற்றுக் கொள்ளுகிறான். இறைவனுக்கு மலர்மாலைதான் அணிவிக்க வேண்டும் ; வேறொன்றையும் அர்ப்பணிக்கலாகாது என்று எண்ணிவிடலாகாது. மலர், இலை, கனி, நீர் எதுவாயினும் அதன்மூலம் இறைவன் பரம திருப்தியடைகின்றான். இலைகளையும் மலரையும் பக்தியோடு அர்ப்பணித்து இறையருளைப் பெற்றுவிடலாம். கீதையில் கிருஷ்ணபரமாத்மா பின்வருமாறு பகர்ந்தருளியுள்ளார்.

पत्रं पुष्पं फलं तोयं यो मे भक्त्या प्रयच्छति ।
तदहं भक्त्युपहृतं अश्नामि प्रयतात्मनः ॥

"யார் எனக்கு இலை, மலர், கனி அல்லது நீரை பக்தியோடு படைக்கிறானோ, அத்தூய மனத்தானது அன்பளிப்பை நான் (இன்புடன்) அருந்துகிறேன்" என்கின்றார். அம்பிகைக்கு அமைந்துள்ள ஆயிரம் நாமங்களுள் 815-வது நாமம் अनित्यतृप्ता (அநித்தியத்ருப்தா) என்பதாகும். அநித்தியப் பொருள்களால் திருப்தியடைபவள் என்று அது பொருள்படுகிறது. நம்முடைய உடல் அநித்தியமானது ; நம்முடைய நெஞ்சமும் அநித்தியமானது ; நம்முடைய அன்பும் அநித்தியமானது; நம்முடைய வாழ்க்கையும் அநித்தியமானதுதான். நாம் அர்ப்பணிக்கின்ற பொருட்கள் அனைத்துமே அநித்தியமானவைகள்தாம். ஆயினும் அன்பினோடு மலரையும் இலையையும் கொண்டு வழிபட்டு நெஞ்சம் நைந்து உருகினால்,அவனருளைப் பெற்றுவிடலாம் என்பதில் ஐயமில்லை. மணிவாசகப்பெருமானே இவ்வுண்மையை வேறோரிடத்தில்,

"யானே பொய்என் நெஞ்சும் பொய்என் அன்பும் பொய்
ஆனால் வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே"

என்று துதிக்கின்றார். அத்தகைய அநித்தியப் பொருட்களையேனும் உனக்கு அன்பினோடு நான் அர்ப்பணிக்கவில்லை என்றும், அநித்தியப் பொருட்களைக் கொண்டேனும் நித்தியப் பொருளாம் இறைவனைத்தேட முயலவில்லை

யென்றும் நொந்து கொள்ளுகிற பாங்கில் "பூமாலை புனைந்தேத்தேன்" என்கின்றார்.

இறைவனுடைய பொருள்சேர் புகழை இனிய பாட்டு வடிவிலும், உரைநடை வடிவிலும் வைத்துப் பாராட்டிப் போற்றுதல் புகழ்ந்துரைத்தலாகும். ஈசனை வாயார வாழ்த்துதலும், புகழ்ந்துரைத்தலும் இறைவனுக்குச் செய்கின்ற மொழிப் பணிகளாகின்றன. ஈசன் திருநாமத்தை நாத்தழும்பேற ஓதுதலையும் மொழிப்பணியோடு சேர்க்கலாம். ஈசனருளைப் பெறுதற்கு நாமஜபம் எளிய மார்க்கமாகின்றது. இவற்றுள் எதனையும் மேற்கொள்ளவில்லை என்பது தோன்ற 'புகழ்ந்துரையேன்' என்கின்றார்.

கோயிலைக் கூட்டிப் பெருக்கிச் சுத்தம் செய்தல் 'திருவலகிடுதல்' என்று பெயர் பெறுகின்றது. மெழுகுதல் — ஈரத்துணி அல்லது சாணமிட்டு மெழுகுதலாகும். திருவலகிடுதலும், மெழுகுதலும் பக்தன் பரமனுக்குச் செய்கின்ற மெய் (உடல்) தொண்டாகும். எளிமையில் செய்யத்தக்க இப்பணிகளையும் செய்திலேன் எனவும், மனம், மொழி, மெய் ஆகிய முக்கரணங்களாலும் வழிபாடியற்றி அதன் பயனாக எய்தப்பெறும் பேரானந்தத்தில் திளைத்துப் பரவசப்பட்டுக் கூத்தாடவும் செய்திலேன் எனக் கூறும் பாங்கில் 'நின் திருக்கோயில் தூகேன் மெழுகேன் கூத்தாடேன்' என்கின்றார்.

ஈசன் குடியிருக்கும் இடம் கோயில். கோயிலைத் தூய்மையாக வைத்திருப்பது இன்றியமையாதது. தூய்மையான இடத்தில்தான் ஈசன் குடியிருப்பான். "கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்பது ஆன்றோர் வாக்கு. இந்தியாவில் கோயில் இல்லா ஊரே இல்லை எனலாம். இந்தியாவையே ஈசனது கோயில் எனலாம். ஆயினும் கோயிலைத் தூய்மையாக வைத்திருக்க நம்மவர் அறியார். கோயிலினுள் சென்று கூப்பாடு போடுவதும், கண்ட கண்ட இடங்களிலெல்லாம் குப்பை போடுவதும்தான் கோவிலில் நாம் செய்கின்ற திருத்தொண்டுகளாக இருக்கின்றன. இந்த அவல நிலையை மாற்றியமைக்கத்தான் நாவுக்கரசர் தாமே கோவில் துப்புரவில் ஈடுபட்டார். நாவுக்கரசர் சொல்லுவதோடு நின்றுவிடுபவரல்லர். செயலிலும் காட்டக்கூடியவராவார். தாம் செல்லும் இடங்கள்தோறும் உழவாரப் படையை உடன் கொண்டு சென்றார். ஆலயந்தோறும் உழவாரப்பணியில் ஈடுபட்டார். உழவாரப்பணி என்றால் என்ன என்று பலர்ஐயுறலாம். கோயிலைச் சுற்றிலும், கோயிலுக்குச் செல்லுகின்ற பாதையிலும் இருக்கின்ற புல் பூண்டுகளையும், முட்செடிகளையும் செதுக்கி அப்புறப்படுத்துதல் உழவாரப்பணி எனப்படுகின்றது. இத்தகைய திருப்பணியில் அப்பரடிகள் ஈடுபட்டார். தம்மோடு வரும் பக்தர்களையும் ஈடுபடுத்தினர். "என்கடன் பணிசெய்து கிடப்பதே" என்ற அவரது திருவாக்கிற்கேற்பத் திரிகரணங்களாலும் யாண்டும் சிவத்தொண்டினையே இயற்றி வந்தார்.

பிரபஞ்சம் முழுதுமே ஈசனது திருக்கோயில் தான். எந்த இடத்தையும் அனுவசியமாக அசுத்தம் செய்யலாகாது. நம்மைத் தூய்மையாக வைத்திருப்பதுபோன்று, நாம் குடியிருக்கும் இடத்தையும் தூய்மையாக வைத்திருத்தல் வேண்டும். பொது இடங்களைத் தூய்மையாக வைத்திருப்பதில் மிகுந்த கவனம் செலுத்த வேண்டும். ஆயிரக்கணக்கான மக்கள் இறைவழிபாடு இயற்றுதற்கேற்ற இடம் ஆலயங்களாகும். அவ்விடங்களைத் தூய்மையாக வைத்திருப்பது இன்றியமையாததாகும். கோயில் துப்புரவில் அனைவரும் கவனம் செலுத்தவேண்டும். இறைபணியாக அதை இயற்றவேண்டும். அத்தகைய பணிகளில் தாம் ஈடுபடவில்லை என்பதைப் புலப்படுத்த "நின்திருக்கோயில் தூகேன் மெழுகேன்" என்கிறார்.

ஆலயத்தைத் தினந்தோறும் கூட்டிமெழுகிக் கொண்டிருப்பதனாலும், பூமாலை புனைந்து இறைவனைப் புகழ்ந்து பாடுதலினாலும் பேரின்பத்தைப் பெறலாம் என்பதை அப்பர் பெருமான்,

"விளக்கினார் பெற்றஇன்பம்
மெழுக்கினாற் பதிற்றியாகும்
துளக்கில்நன் மலர்தொடுத்தால்
தூயவின் னேறலாகும்
விளக்கிட்டார் பேறுசொல்லின்
மெய்ஞ்ஞெறி ஞானமாகும்

அளப்பில கீதஞ்சொன்னூர்க்கு
அடிகள்தாம் அருளுமாறே''
என்ற திருப்பாடலால் விளக்குகின்றூர்.

இத்திருவாசகத்தில் முக்கரணங்களால் நிகழக் கூடியனவாக முறையே இரண்டு இரண்டு செயல்கள் குறிக்கப்படுகின்றன. உள்ளத்தால் நிகழ்வன அகங்குழைதல் உருகுதல்; உரையால் (வாக்கால்) நிகழ்வன ஏத்துதல் புகழ்ந்துரைத்தல்; உடலால் நிகழ்வன தூகல் மெழுகல் முதலியனவாம். முக்கரணங்களாலும் இப்பாடலை நித்தமும் அனுஷ்டானத்திற்குக் கொண்டு வந்தால் அதன் பயனுக விளைவது இறையின்பத்தில் திளைத்துப் பரவசப்பட்டு ஆடும் கூத்தாகும். கூத்தாடுதல் உடலின் செயல் எனினும், உள்ளத்தெழுகின்ற இறையின்பக் களிப்பின் விளைவாகவே நிகழ வல்லதாகும். கரணங்கள் மூன்றும் இறைவயப்பட்டு ஒன்றித்தபின் நிகழவல்லது கூத்தாகும். கூத்தாடல் தொண்டர் அடைந்த பரவசத்தை வெளிப்படுத்துவதாகும். பக்தன் பரமானந்தம் மேலிடும்போது தன்னை மறந்து இறையின்பத்தில் திளைத்து ஆடத் தொடங்கி விடுகின்றுன். இது தொண்டரின் இயல்பாகும். அழியாப் பெருநிலையை, வீடுபேற்றை அடையப்பெறுவது வாழ்க்கையின் நோக்கமாயிருக்க, நானே அநித்திய வாழ்வை மேற்கொண்டு வீணில் ஊனுடலை ஓம்பி வருகின்றேன். ஊனுடலை வீணே பேணுவது மரணத்தை நோக்கிச் செல்லுவதைத் தவிர வேறில்லை என்பது தோன்ற ''சாமாறே விரைகின்றேன்'' என்கின்றூர்.

ஈசனோடு இணக்கம் வைக்கத் துணைபுரிவது யோகம். நான்கு யோகங்களுள் இப்பாடல் பக்தியோகத்தை முக்கியமாக வலியுறுத்துகின்றது. கர்மத்தாலும், யோகத்தாலும், ஞானத்தாலும் வீடுபேற்றை அடையப்பெறலாம். பக்தியோடு கலந்த கர்மமும், யோகமும், ஞானமும் எல்லாரும் பின்பற்றுதற்குரியவையாகும். இறையருளைப் பெறுதற்கு நான்கு யோகங்களுள் ஏதேனும் ஒன்றைப் பின்பற்ற வேண்டுவது அவசியம். ஈசன் யோகபலத்தால் அடையத் தக்கவனுவான் என்பதைப் புலப்படுத்த ''சதுராலே சார்வானே'' என்கின்றூர்.

இதற்கு வேறு பொருள் கூறுதலும் உண்டு. ஈசனை ஆண்டானுகவும் நம்மை அவனது அடிமைகளாகவும் வைத்து, மனம் மொழி மெய்யால் தொண்டுகளைச் செய்து அவனருளைப் பெற முயலவேண்டும். அவ்வாறின்றி மனிதன் தன் அறிவுத் திறனுலும், ஆற்றலாலும் ஈசனை அடைய முயலுவது குற்றமாகும் என்பதைப் புலப்படுத்த ''சதுராலே சார்வானே'' என்கின்றூர். தொண்டுகளால் இறையருளைப் பெற முயலாது ஆற்றலால் பெற முயல்வது வீணே மரணத்தை நோக்கி விரைவதாகும் என்பது தோன்ற ''சாமாறே விரைகின்றேன்'' என்கின்றூர்.

இனி, இத்திருவாசகத் திருப்பாடலின் உட்கிடக்கையைப் பார்ப்போம். உன் திருவடிக்கே குழையேன் உருகேன் என்பதனுலும்; ஏத்தேன் புகழ்ந்துரையேன் என்பதனுலும்; நின்திருக் கோயில் தூகேன் மெழுகேன் கூத்தாடேன் என்பதனுலும் முறையே வெளிப்படுத்தப் படும் பொருளாவது: ''மனைவி மக்கள், வீடு வாசல், பட்டம் பதவிகளின் பொருட்டு அகங் குழையவும் உருகவும் செய்கின்றேன். பொன்னுக்கும் பொருளுக்கும் வேண்டித் தகுதியற்ற அற்ப மனிதர்களைக் கூட வாயார வாழ்த்தவும், நாவாரப் புகழவும் செய்கின்றேன். அநித்திய வாழ்க்கைக்குரிய வீடுவாசல்களை அனுதினமும் கூட்டிப் பெருக்கவும் மெழுகவும் செய்கின்றேன். இன்னேரன்ன உலக வாழ்க்கையில் ஈடுபட்டுப் புலனின்பத்தில் களித்துக் கூத்தாடவும் செய்கின்றேன். அந்தோ! இச்செயல்களெல்லாம் உயிரெடுத்த மானுடப் பிறவி அடைதற்குரிய உறுதிப் பொருளாம் இறைவனைச் சாராமல் பயனின்றிச் சாவதற்கே உரியனவாம்.'' இங்ஙனம் இரங்கி ஏங்குவதை இப்பாடல் வெளிப்படுத்துகின்றது.

மனிதன் தான் பெற்றுள்ள திரிகரணங்களையும் இறைவழிபாட்டிற்கென்றே அர்ப்பணிக்க வேண்டும். ''நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன், நினையாது ஒருபோதும் இருந்தறியேன்'' என்பதற்கேற்ப நெஞ்சத்தையும், ''தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்'' என்பதற்கேற்ப மொழியையும், ''சலம் பூவொடு தூபம் மறந்தறியேன்'' என்பதற்கேற்ப மெய்யையும் இறைத்தொண்டில் ஈடுபடுத்தி இறையருளைப் பெற முயலவேண்டும்.

# சுந்தரர் வாக்கு

(வித்துவான் ஆதி. பாலசுந்தரன்)

சுந்தரர் குறித்துப் பேசும் மக்கள் பேரறிவாளர்கள்; கால தேச வர்த்தமானங்களுக்கு அப்பாற்பட்டவர்கள். தாம் கூறுகின்ற அறிவுரை, கேட்பவர்களின் அடிச்செவியில் சென்று ஏறுமாறு கூறும் சான்றோர்களைப் பார்த்துப் பேசுகிறார் சுந்தரர். பாம்பின் கால் பாம்பறியும் அன்றோ! சான்றோர்களுக்குச் சொல்லி, சான்றோர்கள் அவற்றைக் கேட்டு அவற்றின்படி நடக்க முற்பட்டால், ஒரு தடவைக்குப் பத்துத் தடவை பார்த்தாவது இழிந்தவர்களும் தங்களின் குணத்தை மாற்றிக்கொண்டு நல்லவர் வழியிலே நடப்பார்கள் அன்றோ!

சாதாரண மனிதனைப் புகழ்ந்து பாடுவதில் எவ்விதப் பயனும் இல்லை. ஒரு சமயத்தில் கேட்பான்; பிறிதொரு சமயத்தில் வெறுத்துப் பேசுவான். மனம் மாறுபடும் தன்மை உடையது. எனவே, அப்படிப்பட்ட பொய்ம்மை உடையவர்களைப் புகழ்ந்து பாடி நாம் அடையக்கூடிய பயன் என்ன? ஒன்றும் இல்லை.

பயன் இல்லாத காரியங்களை உலகத்தில் செய்யலாமா? அறிவுடைய யாரும் செய்ய மாட்டார்கள். வருகின்ற பயனும் இரண்டு மடங்காக, மிகவும் பெரியதாக இருந்தால் மிகவும் நல்லது. சிவபெருமானைப் புகழ்ந்து பாடுங்கள்! இவ்வுலக வாழ்வுக்கு வேண்டிய உணவுக்கு ஒரு குறையும் ஏற்படாது கிடைக்கும். உடுப்பதற்கு உடையும் கிடைக்கும். துன்பங்கள் எல்லாம் நீங்கும். இவை மட்டுந்தானா? இப்பிறவி நீங்கி, மறுபிறவியில் சிவலோக பதவியும் கிடைக்கும். இதற்கு எவ்வித ஐயப்பாடும் இல்லை என்கிறார்.

உயிர் வாழ்வதற்காகப் பொய் வார்த்தை பேசித் திரிய வேண்டுமா? பொய் பேச வேண்டிய அவசியம் இல்லை. சிலர் தாங்கள் கூறுவதை உண்மை என்பார்கள். அது தவறு. உண்மை எதுவோ அதைக் கூறினால்தான் உண்மையாகும்.

இறைவன் உண்மைப் பொருள்; அவனால் கிடைக்கக் கூடிய அனுக்கிரகமும் உண்மைப் பொருள். சான்றோர்கள் இறைவன் அனுக்கிரகத்தைப் பெற்றதும் உண்மை. இந்த உண்மையைச் சுந்தரர் நமக்கு எடுத்துச் சொல்லுகிறார்.

பண்பாடு மேம்பாடு அடையாமல், அறிவும் மனித இனத்துக்கு ஏற்றவாறு வளர்ச்சி அடையாமல் கீழான நிலையில் உழன்று கொண்டிருக்கும் சமுதாய அடித்தள மக்களிடத்திலும் சுந்தரருக்கு இரக்கம் இருந்தது. சான்றோர்களுக்குச் சொன்னால் அது மற்றவர்களுக்கும் உதவியாக இருக்கும் என்ற நல்ல நினைப்பில் கூறுகிறார்.

"இடர் கெடலுமாம்" என்கிறார். இறைவனைப் புகழ்ந்து பாடுகின்றவர்களுக்கு எந்த விதத் துன்பமும் வராது. எத்தனையோ துன்பங்கள் நமக்கு வருகின்றன; அவற்றை அனுபவிக்கிறோம். துன்பங்களை மூன்று வகையாக நம் முன்னோர்கள் பாகுபாடு செய்தார்கள். 1. அத்யாத்மிகம். அதாவது தன்னைப் பற்றி வருகின்ற துன்பங்கள். அவை உடலுக்கு வருகின்ற நோய்களும், மனத்தைப் பற்றிப் பிணிக்கின்ற காமம், கோபம் முதலியனவும் ஆகும். 2. ஆதிபௌதிகம், அதாவது பிற உயிர்களைப் பற்றி வருவன. அவை மனிதர், பிசாசு, விலங்கு முதலியவற்றால் நேரிடும் துன்பங்கள் ஆகும். 3. ஆதிதைவிகம்–அதாவது, தெய்வத்தின் மூலமாக வருவன. அவை காற்று, மழை, இடி, புயல் ஆகியவற்றால் வருவன.

இம்மூவகைத் துன்பங்களும் தாபத்திரயங்கள் என்று வடமொழி அறிஞர்களால் கூறப்படும்.

இவற்றுள் எந்தத் துன்பமும் இறைவனை வணங்கினால் வராது என்கிறார் சுந்தரர்.

கொங்கு நாட்டுத் தலங்களில் ஒன்று திருஈங்கோய்மலை. திருஈங்கோய்மலையப்பரைத் தரிசனம் செய்து முடித்து, காவிரியின் தென்கரையில் அமைந்துள்ள திருப்பாண்டிக் கொடுமுடி என்னும் தலத்துக்கு எழுந்தருளி வருகின்றார் சுந்தரர்.

மெய்ம்மயிர்சிலிர்க்கிறது; கண்களில் இருந்து கண்ணீர் சொரிகிறது. எல்லாவற்றுக்கும் மேலாகப் பக்திப் பிரவாகம் பொங்கி எழ, கொடுமுடி அப்பரைப் போற்றிப் பாடுகின்றார் சுந்தரர். இத்தலத்தில் பாடிய பாடல் ஒவ்

வொன்றின் கடைசியிலும் "நமச்சிவாயவே" என்று முடியும். ஆகவே, நமச்சிவாயத் திருப் பதிகம் என்று இதைக் கூறுவார்கள்.

"மற்றுப் பற்று எனக்கு இன்றி நின்திருப்
பாதமே மனம் பாவித்தேன்
பெற்றலும் பிறந்தேன் இனிப் பிறவாத
தன்மை வந்து எய்தினேன்
கற்றவர் தொழுது ஏத்தும் சீர்க் கறையூரிற்
பாண்டிக் கொடுமுடி
நற்றவா உனை நான் மறக்கினும்
சொல்லும்நா நமச்சி வாயவே."

கற்றவர்கள் அனைவரும் வணங்கித் துதித்துப் போற்றும்படியான புகழ்மிக்க கொடுமுடியில் எழுந்தருளி யிருப்பவனே! நல்ல தவ வடிவான இறைவனே! எனக்கு உன்னைத் தவிர வேறு துணை இல்லை. உனது திருப் பாதங்களையே துணையாக எனது மனத்தில் கருதியுள்ளேன். அப்படிக் கருதின பிறகே நான் மனிதப் பிறவி எடுத்த பயனை அடைந்தேன். இனிமேல் எந்தப் பிறவியும் என்னை வந்து அடையாதபடியான ஒரு தன்மை எனக்கு வந்து விட்டது. ஆகவே உன்னை நான் ஒருபோதும் மறக்கமாட்டேன்; ஒரு வேளை மதிமயங்கி மறந்துவிட்டாலும் எனது நாக்கு இடைவிடாமல் உன் திருப்பெயராகிய நமச்சிவாய என்பதனையே சொல்லிக்கொண்டிருக்கும் என்கிறார் வன்றொண்டரான சுந்தரர்.

மனித வாழ்வு குறையுடையது. பூரண வாழ்வு ஆகாது. குறைபாடு உடைய வாழ்வை விட்டுப் பூரண வாழ்வை அடைவதே வாழ்வின் குறிக்கோள். பூரண வாழ்வு அடைய பரிபூரணன் ஆகிய இறைவன் திருவருள்தான் துணைசெய்தல் வேண்டும். குருடன் குருடனுக்கு வழிகாட்ட முடியாது. குருடும் குருடும் சேர்ந்து குருட்டாட்டம் ஆடிக் குழிக்குள் விழ வேண்டியதுதான். குறையுடைய மனிதன் குறையுடைய மனிதனுக்கு வழிகாட்டிவிட முடியாது. இயல்பாகவே பாசங்களில் இருந்து நீங்கிய, வரம்பில்லாத ஆற்றலை உடைய பரிபூரணக் கடவுளே மனிதனுக்கு வழிகாட்ட முடியும்.

தத்துவவாதி திருவள்ளுவர். யதார்த்தம் எதுவோ அதைப் பேசுபவர் வள்ளுவர். வள்ளுவர் உலகப்பற்றை ஒழிப்பதற்கு,

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"

என்கிறார். மனத்தில் நிறைந்துள்ள பற்றினை விட்டு விடுவதற்கு என்ன வழி தெரியுமா? எவ்விதப் பற்றும் இல்லாத இறைவன் மீது பற்று வையுங்கள். உங்கள் அகப்பற்றும், புறப் பற்றும் நீங்கிவிடும் என்கிறார்.

இந்தப் பாட்டினைப் படிக்கும்போது, வேறு நினைவுகள் தோன்றாதபடி, தம் சொற்களால் படிப்பவர் மனத்தைப் பிணித்துவிடுகிறார்வள்ளுவர். ஒரே ஒரு வார்த்தையை வைத்துக் கொண்டு, பற்று என்ற ஒரே சொல்லைக் கொண்டு வார்த்தை ஜாலம் (Verbal magic) செய்கிறார் வள்ளுவர்.

எனவே, கருவிலே திருவுடைய சுந்தரரும், பகுத்தறிவு வாதியான வள்ளுவரும் கூறுகின்ற கருத்துக்கள் ஒத்து விளங்கக் காரணம் என்ன? சான்றோர்களின் எண்ணம் எப்போதும் ஒன்று போல அமைந்திருக்கும் என்பதுதான் இதற்குரிய விடை.

உன் திருவடிகளே சரணம் என எனது மனத்தில் உறுதிகொண்டேன். இப்படி உறுதி கொண்ட காரணத்தால் நான் மனிதப் பிறவி எடுத்ததன் பயனை அடைந்தேன் என்கிறார். பறவைகளுக்கும், விலங்குகளுக்கும் அறிவு வளர்ச்சி அடைவது இல்லை. குறிப்பிட்ட அளவோடு அறிவு வளர்ச்சிஅவற்றிற்கு நின்று விடுகிறது. மனிதனுக்கு மட்டுமே அறிவு வளர்ச்சி அடைந்து, நன்மை தீமைகளை அவன் உணரத் தொடங்குகிறான்.

மனித வடிவில் இருப்பவர்கள் எல்லாரும் மனிதர்கள் ஆகமாட்டார்கள். மனிதப் பண்பு உடையவர்களே மனிதர்கள். விலங்குக்கு மனிதப் பண்பு இருந்தாலும் மனித இனத்தோடு சேர்த்துக்கொள்ளலாம். அனுமன் குரங்கு இனம். மனிதப் பண்பு அவனிடத்தில் நிறைந்து இருந்தது; இராமபிரான் சேர்த்துக்கொண்டான்; "சொல்லின் செல்வன்" என்ற சிறப்பையும் கொடுத்தான்.

மனிதப் பிறவி எடுத்தாலும்,மனிதராகவாழ்ந்தால்தான் மனிதப் பிறவிப் பயனை அடைய முடியும். எப்போது மனிதப் பிறவி நிறைவு எய்தும்? உலகத்தில் எந்தக் காரியம் செய்தாலும் மனிதப் பிறவி முழுமையாகாது. இறை

வனை வழிபட்டால் மனிதப் பிறவி நிறைவு எய்தும்.

இங்கேயும் வள்ளுவரே நமக்குத் துணைசெய்கிறார். எப்படி? "கற்றதனால் ஆய பயன்என் கொல் வாலறிவன் நற்றாள் தொழாஅர் எனின்." தூய அறிவினை உடைய இறைவனின் திருவடிகளை வணங்காவிட்டால், கல்வி கற்றதனால் என்ன பயன்? ஆகவே, கல்வி கற்றதன் பயன் இறைவனை வணங்கவேண்டும்.

கல்வி ஒரு மனிதனை முழு மனிதன் ஆக்குகிறது. "Education is the manifestation of perfection already in man" என்கிறார் சுவாமி விவேகானந்தர். அத்தகைய பூரணத் தன்மையைக் கொடுக்கும் கல்வியை நன்கு கற்றவன் இறைவனை வழிபட்டால்தான், மனிதப் பிறவியின் பயனை அடைவான் என்பது வள்ளுவரது வாக்கு.

வள்ளுவரின் கருத்தை உணர்ந்தவர் சுந்தரர். சான்றோர்களின் நல்ல எண்ணங்கள் அப்படியே வானத்தில் மிதந்துகொண்டு வருகின்றன. வானொலி அலைகள் ஈதரில் எங்கும் மிதந்து வருகின்றன. வானொலிப் பெட்டியாகிய ரிசீவர் உள்ள இடங்களில் அந்த அலைகள் இழுக்கப்பட்டுச் செயல்படுகின்றன. அது போலவே சான்றோர்களின் நல்ல எண்ணங்கள், நல்ல மனங்களால் ஈர்க்கப்பட்டுத் தொழிற்படுகின்றன. வள்ளுவர் சான்றோர்; அவரது சிந்தனை அலைகள் எங்கும் தவழ்கின்றன. சுந்தரர் நல்லவர்; அந்தச் சிந்தனைச் செல்வத்தைத் தம் வசம் ஈர்த்துக்கொண்டார் என்று கூடச் சொல்ல வேண்டியதில்லை. நல்லவரை—நல்ல மனத்தை நாடி நல்ல எண்ணம் தானாக வந்தது. அந்த எண்ணத்தைத் தம் சுயானுபவத்தை உலக மக்கள் அனைவருக்கும் கிடைக்கச் செய்யவேண்டும் என்ற பெரு நோக்கில் சுந்தரர், "மற்றுப் பற்று எனக்கு இன்றி நின் பாதமே மனம் பாவித்தேன்" என்கிறார்.

திருவொற்றியூர்சென்னைக்குஅருகிலே உள்ள தலம். அந்த ஊர் அந்நாட்டு மன்னனால் ஒற்றி வைக்கப்பட்டது. எனவே ஒற்றியூர் என்ற பெயர் வந்தது. அவ்வூரில் வாழ்ந்த சங்கிலியார் என்ற பெண்மணியைச் சுந்தரர் மனம்புரிந்து வாழும் நாட்களில் ஒருநாள், திருவாரூர் எம்பெருமான் வீதிவிடங்கப் பெருமானை மறந்து நான் இவ்வூரிலேயே இருந்துவிட்டேனே என்று மிகவும் மனம் கலங்கி, திரு ஆரூரானை நினைத்துப் பாடுகின்றார். அப்பாடல்:

"ஏழ் இசையாய் இசைப்பயனாய்
இன்அமுதாய் என்னுடைய
தோழனுமாய் யான் செய்யுந்
துரிசுகளுக்கு உடனாகி
மாழைஒண்கண் பரவையைத்
தந்து ஆண்டானை மதிஇல்லா
ஏழையேன் பிரிந்திருக்கேன்
என்ஆரூர் இறைவனையே."

ஏழு இசையாய் இலங்குகிறான் இறைவன். இசைப்பயனாகிய பண்ணாகவும் திகழ்கிறான். இனிய தேவாமிர்தமாகவும் தோன்றுகிறான். என்னுடைய தோழனாகவும் உதவி செய்கிறான். யான் செய்யும் குற்றங்களுக்கெல்லாம் உடன் பட்டுஇருக்கிறான்.பரவையாகிய இப்பெண்ணை மணக்கவும் அருள்செய்தான். என்னை அடிமையாக ஏற்றுக்கொண்ட ஆரூர் இறைவனை அறிவில்லாதவனாகிய நான் பிரிந்து இங்கே இருப்பேனா? இருக்கமாட்டேன்; விரைந்து சென்று அவனை வணங்குவேன் என்கிறார்.

ஏழு இசையாக இறைவன் திகழ்கிறான். ச, ரி, க, ம, ப, த, நி — சட்ஜம், ரிஷபம், கமகம், மத்திமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்று கர்நாடக இசையில் சொல்லுவார்கள். குரல், துத்தம், கைக்கிளை, இளி, உழை, விளரி, தாரம் என்று தமிழ் இசையிலே கூறுவார்கள். எல்லா இசையிலும் கடவுள் இருக்கிறார். சிவபிரான் வீணை வாசிப்பார்; சாமகானப் பிரியர். கலைமகள் கையிலே யாழ் உள்ளது. கண்ணபிரான் கையில் வேய்ங்குழல் இருக்கிறது. நந்தி மத்தளம் கொட்டுகிறார். இப்படி இசைக்கும் கடவுளுக்கும் தொடர்பு வைத்துச் சொல்லப்படுவதை நாம் அறிவோம்.

இசையின் பயனாகிய பண்–இராகம்–ஆகவும் விளங்குகிறான். இசைக்குப் பயன் பொருத்தமான இராகம். பொருத்தமான இராகம் அமைவது பாடலுக்கு—இசைக்குச் சிறப்புத் தரும். உள்ளத்துள்ளே இருக்கும் உணர்வை வெளிக்காட்ட உதவும். இசையைச் சமயத்துக்கும் சூழ்நிலைக்கும் தகுந்தாற்போல இராகத்துடன் அமைத்துக்கொள்ளலாம்.

குழந்தை அழுகிறது; அது ஒருவித இராகத்துடன் அமைந்த இசை. மங்கல இசை; அதற்குரிய இராகம் வேறு. ஒப்பாரி அழுகுரல் பாட்டாக வெளி வருகிறது; அதற்குரிய இராக பாவம் வேறு. இயற்கை எழுப்பும் பல்வேறு அருவி ஓசை, அலை ஓசை, மூங்கில், சவுக்கு மரங்களில் காற்று மோதி எழும் ஓசை ஆகிய இயற்கை இசையும் உண்டு.

இந்த இசைகளாகவும், இசையின் பயனாகவும் கடவுள் திகழ்கிறார்.

உண்பவரை நீண்ட நாள் வாழவைக்கும் தன்மையது—சாவு ஏற்படாமல் தடுப்பது தேவாமிர்தம். எப்போதும் இனிமை தருவது. இறைவன் தேவாமிர்தத்துக்கு இணையானவன்; அவனருளைப் பெற்றவர்களுக்கு ஒருவித இன்பம் உண்டாகும். பிணி, மூப்பு, சாவு என்பன அவர்களுக்கு இல்லை.

"என்னுடைய தோழனுமாய்" என்கிறார் சுந்தரர். சுந்தரருக்குத் தோழனாக இருந்தவர் சிவபெருமான். தோழனாக இருந்து பரவையாரிடம் சுந்தரருக்காகத் தூது சென்றவர் சிவபிரான். சுந்தரருக்குத் தம்பிரான் தோழன் என்ற பெயர் உண்டு.

இறைவன் தோழனாக வாய்ப்பது அருமை. தோழனாக வாய்த்து உதவி செய்வது அதை விட அருமை. கண்ணன் அர்ச்சுனனுக்கும், குசேலனுக்கும் தோழனாக வாய்த்து நல் உதவி புரிந்துள்ளார். சிவபிரான் சுந்தரருக்குத் தோழனாக அமைந்து உதவி செய்திருக்கிறார். நண்பன் தவறு செய்யும்போது, தவற்றை எடுத்துக் கூறி நல்வழிப்படுத்துவது நல்ல நண்பனுக்கு அழகு. சுந்தரர் சங்கிலியாரை மறந்த சமயத்திலும், அது தவறு என எடுத்துக் காட்டி அவருக்குத் தண்டனை வழங்கியவர் சிவபிரான்.

'' யான் செய்யும் துரிசுகளுக்கு உடனாகி ''— துரிசு என்றால் குற்றம். நான் செய்யும் தவறுகளுக்கெல்லாம் உடன்பட்டு நின்றாய் என்கிறார். சுந்தரர் பரவையாரையும், சங்கிலியாரையும் மணந்து கொண்டதும், அவ்வாறு மணம் செய்து கொண்டதன் தொடர்பாகச் செய்த சில தவறுகளும் சுந்தரர் செய்த குற்றங்கள். அவ்வாறு சுந்தரர் குற்றங்கள் செய்தாலும் அவரை வெறுத்து விடாமல், அன்பு காட்டி அரவணைத்து அருள் சுரந்து அடிமையாக ஆக்கிக்கொண்டார் சிவபிரான்.

தன் கூற்றாகக் கவி அமைந்துள்ளது. பாடுகின்ற சுந்தரர் தாமே சிவபெருமானை நினைத்துப் பாடுகின்றார். படர்க்கைக் கூற்றாகக் கவிதை அமையவில்லை. பாடலைப் பாடுகின்ற ஒவ்வொருவரும் தாமே பாடுகின்ற ஓர் உணர்ச்சியினைப் பாடல் தருகிறது.

நாம் ஒருவருக்கு ஓர் உறுதிமொழி கொடுப்பதற்கு முன் அதை நிறைவேற்ற நம்மால் இயலுமா என்பதை நன்றாகச் சிந்தித்த பிறகே கொடுக்கவேண்டும். சிந்தித்துக் கொடுக்காவிட்டால் கொடுத்தவர், பெற்றவர் ஆகிய இருவருக்கும் மனத்துயர் ஏற்படும். பெரியவர்கள் முன்னிலையில் ஓர் உறுதிமொழி கொடுத்தால் அதனை நிறைவேற்றியே ஆகவேண்டும். அப்படி நிறைவேற்றத் தவறினால், அப்பெரியவர்களின் எண்ணமே வலிவாக நின்று, உறுதிமொழி தவறியவருக்குத் தக்க தண்டனை தரும்.

தம்பிரான் தோழன் சுந்தரர், திருவொற்றியூரில் திருக்கோவிலில், மகிழ மரத்தடியில், உன்னை ஒருநாளும் பிரிய மாட்டேன் என்று சபதம் கூறி, சங்கிலியார் என்ற பெண்மணியைத் திருமணம் செய்து கொண்டார். உன்னைப் பிரிந்து திருவொற்றியூர் எல்லையைக் கூடத் தாண்டிச் செல்லமாட்டேன் எனவும் உறுதிமொழி கொடுத்தார். ஆனால், சில நாள்களில் அந்த உறுதிமொழியைப் புறக்கணித்துச் சங்கிலியாரைப் பிரிந்து, திருவொற்றியூர் எல்லையை நீங்கினார். பெண்ணை மணந்து கொண்டு பிரியமாட்டேன் என்று கூறிய உறுதிமொழி; இறைவன் திருமுன்னர் கொடுத்த உறுதிமொழி; அவ்வுறுதி மொழியைப் புறக்கணித்ததால், சுந்தரரின் இருகண்களின் ஒளியும் மறைந்தது; பார்க்கும் ஆற்றலை இழந்து விட்டார். அந்த அளவில் மூர்ச்சையுற்றார். செய்வது அறியாது திகைத்து நின்றவருக்கு, எம்பெருமான் அருளால் தெளிவு பிறந்தது. "பெண்ணுக்குக் கொடுத்த உறுதிமொழியை நிறைவேற்றத் தவறி விட்டேன்; அதனால் எனக்கு இந்தத் தீவினை வந்து சேர்ந்தது; இந்தத் துன்பம் என்னை விட்டு நீங்குமாறு எம்பெருமானைப் போற்றிப்பாடுவேன் '' எனச் சுந்தரர் எண்ணிப் பாடுகின்றார்.

# கர்நாடக யாத்திரை

( சுவாமி சாந்தானந்தர் )

பாண்டவர்கள் வனவாசத்தில் இருந்த பொழுது முனிவர்களுடைய ஆச்ரமங்களின் பக்கங்களில் வாழ்ந்து வந்தார்கள். ரிஷிகளுடன் சத்சங்கம் பண்ணுவார்கள், சத் விஷயங்களில் ஈடுபடுவார்கள். அது அவர்களது மனதிற்கு மிகவும் உகந்ததாக இருந்தது. தர்மராஜனைத் தவிர மற்றவர்களுக்கு இடையிடையே தங்களுக்கு ஏற்பட்ட அவமானம், இழிநிலை,தௌர்ப்பாக்கியம் மனதில் முன்னணிக்கு வந்துவிடும். அப்போது அவர்கள் தர்மராஜனைச் செயலில், யுத்தத்தில், க்ஷத்திரிய தர்மத்தில் ஈடுபடும்படி தூண்டுவார்கள். தர்மராஜனுக்கு இவ்வுலக வாழ்க்கையின் உண்மை தெரியும். உண்மையை உணர்ந்த ஞானி அவன். அவனுக்கு வனவாசம் தௌர்பாக்கியமாகவே தோன்றவில்லை. சகோதரர்களைச் சமாதானம் செய்வான். முனிவர்களுடன் சேர்ந்து வாழ்ந்து வந்ததினால் அவர்கள் வெகுவாக ஆறுதல் அடைந்திருந்தார்கள். மேலும் அவர்கள் மனதுக்கு உற்சாகமும், புதிய நல்ல பிரவிருத்திகளும், ஈடுபாடும் தருவதற்காக ஒரு முனிவர் அவர்களை க்ஷேத்திர யாத்திரை செய்யும்படி தூண்டினர். இந்த யோசனை அவர்களுக்கு மிகவும் பிடித்திருந்தது. அங்ஙனமே தீர்த்த யாத்திரை செய்தார்கள், மிகுந்த மன நிறைவு அடைந்தார்கள். நம்முடைய ஜீவிதத்தைப் பற்றிய உண்மையும் இதுவே. வாழ்வில் துன்ப துயரங்கள் தவிர்க்க முடியாதவை. அவைகள் நமது அகக்கண்ணைத் திறக்கின்றன. உலகின் காட்சி அப்பொழுது உள்ளபடி நமக்குத் தென்படுகிறது. அதன் விளைவாக மனது பக்தியில், சன்மார்க்கத்தில் ஈடுபடுகிறது. ஆயினும் மாயையின் விளைவாக அவ்வப்பொழுது தீவிரம்,ஆர்வம் குறைகின்றன. வேறு எண்ணங்களும் இடம்பெற்று விடுகின்றன. இவ்வுண்மைகளை உணர்ந்தே நம் முன்னோர்கள் கணக்கற்ற சாதன மார்க்கங்களை ஏற்படுத்தினர்கள். நல்ல சத் கதாகாலக்ஷேபங்களைக் கேட்பதும், நல்ல நூல்களை வாசிப்பதும் மனதில் நல்ல விருத்திகளை உண்டாக்குகின்றன. நம் மனதைத் தெய்வ சிந்தனையில் ஈடுபடச்செய்கின்றன. அதேபோலப் பாடல் பெற்ற ஸ்தலங்களுக்குச் சென்று ஆங்கு ஆண்டவனைத் தரிசித்து வருவதும், தீர்த்தமாடி வருவதும், ஸ்வானுபூதி பெற்ற பெரியோர்களைச்சேவித்து வருவதும் நல்ல சம்ஸ்காரங்களை உண்டாக்குகின்றன. க்ஷேத்திரங்களுக்கு யாத்திரை போய் வருவது மனதுக்குப் புதிய உற்சாகத்தையும் எழுச்சியையும் உண்டாக்குகிறது. இத்தகைய ஆத்ம லாபம் அடைய வேண்டுமென்று ஆவல்கொண்டு நாங்கள் துறவியர் மூவர், அன்பர்கள் இருபத்தொரு பேர், தாய்மார்கள் இருபத்தாறு பேர் ஆக ஐம்பது பேர் கர்நாடகத்திலுள்ள க்ஷேத்திரங்களுக்கு யாத்திரை போய்வரத்திட்டமிட்டு, தக்க ஏற்பாடு செய்துகொண்டு 18-9-77ஆம் தேதியன்று புறப்பட்டோம்.

கர்நாடகம் என்றால் பழமை, புது நாகரிகம் தெரியாதவன் என்கிற ஒருபொருளில் நாம் வழங்கி வருகிறோம். எங்கள் தாயார் 'ரொம்ப கர்நாடகம்' என்று சொல்லுகிறோம். கர்நாடக சங்கீதம் என்றால் கர்நாடகதேசத்தில் தோன்றி வளர்ந்து நிலவிவரும் இசை என்று பொருள். ஹிந்து மதத்தை மதங்களின் தாய்மதம் என்று எப்படிச் சொல்லுகிறோமோ அதே போலக் கர்நாடக சங்கீதமும் மற்ற எல்லாச் சங்கீதங்களுக்கும் தாய் என்று இசை வல்லுநர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள். எங்குச் சங்கீதம் நன்கு விருத்தியடைந்துள்ளதோ, நன்கு கையாளப்படுகிறதோ அங்கு பக்தி, பண்பாடு, இதர லலித கலைஞானங்கள் எல்லாம் நன்கு விருத்தியடைந்திருக்கும். மனித மனதின்மேல் சங்கீதம் செலுத்தி வரும் ஆட்சியின் சிறப்பை நாம் காண்கிறோம், உணர்கிறோம். அது மனதையே மாற்றிவிடக்கூடியது. மைசூர் சமஸ்தானம், மேற்குக் கடற்கரைப் பட்டினமாகிய மங்களூர், குடகு மாகாணம் ஆகிய நிலப்பகுதிகள் கர்நாடக மாகாணத்திலிருக்கின்றன. பூகோளத்தில் மைசூர் பீடபூமி என்று படித்திருக்கிறோம்.மேற்குத் தொடர்ச்சி மலையை ஒட்டி அதன் கிழ்ப்புறம் அமைந்துள்ளது இப்பீடபூமி. பீடபூமி என்றால் மேட்டுப் பாங்கான பிரதே

சம் என்று பொருள். காவேரிநதி குடகில் உற்பத்தியாகி மைசூர் சமஸ்தானத்தின் வழியாகத் தமிழ் நாட்டிற்கு வருகிறது. மைசூர் மலை வளம் நிறைந்தது. வனங்களும், சிறு சிறு நதிகளும் ஏராளமாக இருக்கின்றன. சீலமும் பண்பாடும் வாய்ந்த மக்களும், ஆலயங்களும், புண்ணிய நதிகளும், மடாலயங்களும் தமிழ் நாட்டைப் போலவே மைசூரிலும் உள்ளன.

யாத்திரை வாசிகளில் முப்பத்தைந்து பேர்கள் 17–9–77 அன்று காலை தபோவனத்தில் ஒன்று கூடினோம். மாலை 4 மணி முதல் 5 மணி வரை பிரார்த்தனை மண்டபத்தில் ஐக்கிய வணக்கம் செய்தோம். ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள், ''பரதகண்டம் புண்ணிய பூமி. இந்திய தேசம் முழுவதுமே புனித யாத்திரைக்குரிய பெருமையும் தெய்வீகமும் உடையது. தேவாலயங்களும், அவதார புருஷர்கள் தோன்றிய ஸ்தலங்களும், பக்தர்கள், ஞானிகள் தோன்றிய க்ஷேத்திரங்களும் இந்திய நாட்டில் ஏராளமாக இருக்கின்றன. அவைகளுக்கு அவ்வப்பொழுது யாத்திரை போய் வருவது மனதுக்குப் புதிய வேகம் கொடுக்கும். மனம் பக்தியில் தீவிரம் அடையும். நீங்கள் எல்லாரும் ஒரே மனப்பான்மைகொண்ட நல்ல ஆத்ம சாதகர்கள். பொறுக்கி எடுத்த திருக்கூட்டம். ஆகையால் யாத்திரையில் சாதாரணமாக ஏற்படக் கூடிய மனஸ்தாபங்கள், சண்டை சச்சரவுகள் என்பன உண்டாகா. ஒரே மனதாக யாத்திரையைப் பயனுடையதாகச் செய்து வாருங்கள். தினம் விடாமல் திரிசந்தியா வழிபாடும், ஆலயங்களில் ஐக்கிய வணக்கமும் செய்யுங்கள். அப்போது க்ஷேத்திரங்களில் நிலவியுள்ள அருட்சக்தியை, தெய்வீக எண்ணங்களை உணர வல்லவர்கள் ஆவீர்கள். ஒவ்வொருவருக்கும் ஏதோ ஒரு க்ஷேத்திரத்தில் அதீதமான மனநிலை உண்டாவதை அனுபவிப்பீர்கள். ஆலயங்களில் பணிபுரியும் அர்ச்சகர்களுக்கும், இதர பணியாளர்களுக்கும் மனமுவந்து தாராளமாகத் தக்ஷிணை வழங்கி வாருங்கள். எல்லாம் வல்ல இறைவன் அருளால் உங்கள் யாத்திரை இனிது நிறைவேறுவது ஆதக'' என்று ஆசி கூறினர்கள். ஸ்ரீமத் சுவாமிஜி அவர்களை யாத்ரிகர்கள் வணங்கி விடை பெற்றுக்கொண்டு ஒரு தனி பஸ் மூலம் யாவரும் மாலைஏழுமணிக்குத் திருச்சிராப்பள்ளி ஜங்ஷன் வந்து சேர்ந்தோம். ஆத்ம நண்பர்கள் பலர் எங்கள் யாத்திரை மங்களகரமாக அமையவேண்டும் என்கிற பிரார்த்தனை மனப்பான்மையுடன் வழியனுப்பினர்கள். ஐலண்டு எக்ஸ்பிரஸ் ரயிலில் பிரயாணம் செய்து 18–9–77 அன்று காலை பெங்களூர் கண்டோன்மெண்ட் வந்து சேர்ந்தோம்.

பெங்களூரில் தொழில் நடத்தி வரும் தமிழ்நாட்டு அன்பர் ஒருவர் கர்நாடக யாத்திரைக்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்திருந்தார். அவரும் எங்களுடன் யாத்திரை வாசியாக வந்தார். பெங்களூரில் ஒரு பஸ் ஏற்பாடு செய்து கொண்டோம். எங்களுக்கு அமைந்த பஸ் டிரைவரும், கண்டக்டரும் மிகவும் நல்லவர்கள். இந்த யாத்திரையில் எங்களுக்கு அமைந்த பாக்கியங்களில் இதுவும் ஒன்று. அவர்களால் யாத்திரை மிகவும் சௌகரியமாக அமைந்தது. பேட்டரி செல்லில் வேலை செய்கிற ஒலி பெருக்கி சாதனம் ஒன்றைப் பஸ்ஸில் வசதியாகப் பொருத்திக்கொண்டோம். அது மிகவும் பயன்பட்டது. பஸ் பிரயாணத்தின்போதே பஜனை, கதாகாலக்ஷேபம், அறிவிப்புகள் செய்ய வசதியாகஇருந்தது. அன்பர்கள் தங்களுக்கு அறிவித்திருந்தபடி சாமான்களைக் குறைவாகவும், மழையில் நனைந்தாலும் படுக்கை முதலியவைகள் ஈரமாகாதபடி பிளாஸ்டிக் துணியால் சுற்றியும் கொண்டு வந்திருந்தார்கள். யாத்திரிகர்கள் இருபத்தைந்து குடும்பங்களைச் சேர்ந்தவர்களாக இருந்தார்கள். ஒவ்வொரு குடும்பத்தினரும், யாத்திரிகர்களுக்காகப் பட்சணங்கள் தயார் செய்து கொண்டு வந்திருந்தனர். அப்பலகாரங்களின் ருசியே அலாதியாக இருந்தது. வேளைக்கு டிபன் தர இரண்டுபேர், சாமான்கள் பந்தோபஸ்துக்கு இரண்டுபேர் இப்படிக் கடமைகள் தக்கவர்களிடம் ஒப்படைக்கப்பட்டன. அனைவரும் அவரவர் கடமைகளை மிகவும் சிரத்தையுடன் செய்தார்கள். ஓர் ஊரிலிருந்து அடுத்த ஊருக்குப் போகும் போது அதிகாலையில் நான்கு மணிக்குப் புறப்பட்டு விடுவோம். இதில் வெகுவாக நேரம் மீதியாகும். பஸ்ஸிலேயே பள்ளியெழுச்சி

பாடிப் பஜனை செய்வோம். தக்க இடத்தில் குளித்து உடைகளை மாற்றிக்கொள்வோம். எக்காரியத்தையும் விரைவில் செய்துமுடிப் பதில் அனைவருமே கருத்துச் செலுத்தி எச் சரிக்கையாக இருந்தனர். பஸ்ஸில் வசதியான முன்பகுதியிலும், மத்திய பகுதியிலும், வயது முதிர்ந்தவர்கள், கனத்த சரீரம்படைத்தவர் கள், சரீர உபாதை உள்ளவர்கள் ஆகியவர் களுக்கு இடங்கள் தரப்பட்டன. இளைஞர்கள் தாமாகவே கடைசியில் அமர்ந்து கொண்டார் கள். நாம் நம் தாய் தந்தையருக்கு எப்படி வசதி செய்து கொடுப்போமோ அப்படி இங்கு இளைஞர்கள் நடந்து கொண்டார்கள். தங்கு கிற இடங்களிலும் இம்முறையே பின்பற்றப் பட்டது. சுயநலம் இல்லாவிட்டால் எல்லாக் காரியங்களும் மங்களமானவையாகவும், ஆனந்தமானவையாகவும் ஆகிவிடுகின்றன.

யாத்திரைபஸ் காலையில் பெங்களூர் கண் டோன்மெண்டிலிருந்து புறப்பட்டது. முதலில் பெங்களூர் அன்பர் வீட்டிற்குச் சென்றோம். காலைக்கடன், ஸ்நானம் முடித்து அவர் வீட் டில் ஐக்கிய வணக்கம் செய்து சிற்றுண்டி அருந்தினோம். நாங்கள் இந்த யாத்திரை முழுவதும் தாய் அன்பில் தோய்ந்திருந்தோம். தபோவனத்தில் ஆரம்பித்த அன்பு இச்சிற் றுண்டியிலும் விளங்கியது, பரவியது. ''இது பெங்களூர் ஸ்பெஷல், இது நன்றாக இருக் கும், பஸ் பயணத்துக்கு நன்றாகச் சாப் பிடவேண்டும்'' என்றெல்லாம் சொல்லி அவ்வீட்டுத்தாய் கொஞ்சம் கொஞ்சமாகப் பரி மாறி எங்களை அதிகம் சாப்பிட வைத்துவிட் டார்கள். அந்த அம்மையாரும் எங்களுடன் யாத்திரை வந்தார்கள். சிற்றுண்டிக்குப் பிறகு ஒன்பது மணிக்குப் பஸ்ஸில் பெங்களூரைச் சுற்றிப் பார்க்கப் புறப்பட்டோம். முதலில் லால்பாக் என்னும் பிரசித்தி பெற்ற பூங்கா வைப் பார்த்தோம். ஆறு ஏக்கர் பூமியில் அது அழகுற அமைக்கப்பட்டுள்ளது. பிரம் மாண்டமான மரங்கள், அழகான செடிகள், விதவிதமான பூச்செடிகள் அங்கு அமைக்கப் பட்டுள்ளன. எத்தனை வித வண்ணப் பூக்கள்! அதன் நடுவே காவேரி மாதா கோவில், கண் ணாடி மண்டபம், முதலியன உள்ளன. மிகப் பெரியநகரங்களுக்குக் காற்றைச் சுத்தப்படுத்தி பிராணவாயு தரும் நிலையங்களாக இருப்பவை இப் பூந்தோட்டங்களே. குழந்தைகளுக்கும் பெரியவர்களுக்கும் சொர்க்கம் போன்று அது விளங்குகிறது. அடுத்து பசவன்குடிசென்றோம். பசவன் என்றால் நந்தி. குடி என்றால் கோவில். அங்கு நந்தீசுவரர் கோவில் உள்ளது. நந்தியை வழிபடும் பழக்கம் நம் பக்கங்களில் இல்லை. ஆனால் 'நந்தி மகன்தனை ஞானக்கொழுந் தினை, புந்தியில் வைத்து அடிபோற்றுகின் றேனே' என்று விநாயகர் ஸ்துதிபாடுகிறோம். இங்கு நந்தி என்று பரமேசுவரன் குறிப்பிடப் படுகிறார். நந்தியெம்பெருமான் இறைவனு டன் ஐக்கியப்பட்டுவிட்டதால் நந்தி வேறு இறைவன் வேறு அல்ல. ஆகையால் நந்தி வழிபாடு சிவ வழிபாடே ஆகும். தஞ்சாவூர் பிருஹதீசுவரர் ஆலயத்தில் மிகப் பெரிய நந்தி உள்ளது அல்லவா! அதைப் போன்ற நல்ல அழகிய பெரிய நந்தி விக்ரஹங்கள் கர்நாடகத் தில் பல இருக்கின்றன. நந்தியெம்பெருமானை வழிபட்டுவிட்டுப் பெங்களூரில் உள்ள ஸ்ரீ ராம கிருஷ்ண ஆச்ரமத்திற்குச் சென்றோம். அழ கான சிறு ராமகிருஷ்ணர் ஆலயமும் அமைதி யான சூழ்நிலையும் ஆச்ரமத்தை அலங்கரிக்கின் றன. 1911 ஆம் ஆண்டில் தூய அன்னையார் ஸ்ரீ சாரதா தேவியார் அம்மடத்திற்கு வந்த போது சில தினங்கள் அங்குத் தங்கியிருந்தார் கள். அப்போது அன்னையார் மாலையில் வழக்கமாக அமர்ந்திருந்து தியானம் செய்த பாறையின் மேல் ஞாபகார்த்த மண்டபம் ஒன்று கட்டி அதில் அன்னையார் படம் வைத் துள்ளார்கள். அக்கோவிலை வலம் வந்து தூய அன்னையாரை வழிபட்டு வந்தோம்.

பஸ் வேகமாக நகரின் முக்கிய தெருக்கள் வழியாகப் போய்க்கொண்டிருந்தது. எங்கள் ஒலிபெருக்கியில் 'வலப்பக்கம் விதான்சௌதா-மந்திரிகள் கூடும் சட்டசபைக் கட்டடம் பாருங் கள்' என்றார்கள். பஸ்ஸில் இருந்தபடியேபார்த் தோம். பஸ் கைலாசவைகுண்ட மஹாக்ஷேத்தி ரத்திற்கு வந்து நின்றது. எல்லாரும் பஸ்ஸை விட்டு இறங்கிக்கொண்டிருந்தார்கள். 'கைலா சம்-வைகுண்டம்'-மனதுக்கு எவ்வளவு உகந்த இனியபெயர்கள். இரண்டும் சேர்ந்து எப்படி யிருக்கும்! சர்க்கரைப்பந்தலில் தேன்மழை பெய் தாற்போல் என்பார்கள். இடப் பக்கம் உள்ள

சன்னிதியில் இருபத்தாறு அடி நீளத்தில் ஸ்ரீ மஹாவிஷ்ணு ஆதிசேஷன் மேல் பள்ளி கொண்டு யோகநித்திரையில் இருக்கிருர். திவ் வியமங்கள சொருபியாகிய, ஜகன் மோஹனன் ஆகிய அம் மாயாவி தூங்குவதில்தான் என்ன அழகு! இச்சிலை இன்னும் பூர்த்தியாகவில்லை. கோபுர வேலையும் பாக்கியிருக்கிறது. விரை வில் முடித்துக் கும்பாபிஷேகம் செய்யப்போகி ருர்கள். வலப்பக்க சன்னிதியில் ஸ்ரீ சுந்தரேசப் பெருமான் காட்சி கொடுக்கிருர். தியாக ராஜன், அர்த்தநாரிசுவரன் அங்கு மீனுக்ஷிசமேத ராய் இருக்கிருர். பக்திக்கு என்றுமே குறை வில்லை. எப்போதும் புதுப்புது ஆலயங்கள் எழுந்தவண்ணம் இருக்கின்றன, சமய சமரச மனப்பான்மை எப்பொழுதுமே இருந்து வரு கிறது என்பதற்கு இது சான்ருகிறது. இக்கோ வில் ராஜாஜி நகரில் உள்ளது. ஆலய வேலை பூர்த்தியானதும் சுற்றுப்புற சூழ்நிலையும் தெய் வீகமாக மாறி அமைந்துவிடும். பஸ் புறப்பட் டுக் கைலாச ஆச்ரமத்திற்குப் போய்க்கொண் டிருந்தது. தமிழ் நாட்டைச் சேர்ந்த ஸ்ரீலஸ்ரீ திருச்சி சுவாமிகள் அதன் ஸ்தாபகர். அதன் கிளைகளாக எட்டு ஆச்ரமங்கள் கர்நாடகத்தில் உள்ளன. அவர்களது ஆதரவில்தான் கைலாச வைகுண்ட மஹா க்ஷேத்திர திருப்பணி நடை பெற்றுவருகிறது. கைலாச ஆச்ரமத்திற்குப்பக் கத்திலேயே ஒரு பெரிய ராஜராஜேசுவரி ஆல யமும் கட்டிக்கொண்டிருக்கிருர்கள். மூலஸ்தா னம், முதல் பிரகாரம் இரண்டும் மட்டும் இப் போது முக்கால் பகுதி வேலையாகியிருக்கிறது. விரைவில் கும்பாபிஷேகம் செய்துவிட்டுப்பிறகு படிப்படியாகப் பஞ்சப்பிரகாரமும்கட்டி முடிப் பார்கள். வேலைப்பாடும் அமைப்பும் நன்கு அமைந்துள்ளன. அந்த ஆச்ரமத்தின் ஆதர வில் ஓர் உயர்நிலைப் பள்ளியும் நடைபெற்று வருகிறது. எங்கள் யாத்திரையில் மூன்று நாட் கள் அவர்களின் ஆச்ரமங்களில் தங்க இடமும் உணவும் பெற்ருேம். ஏகாந்தமான, அமைதி யான, அழகான அந்தக் கைலாச ஆச்ரமத்தி லிருந்து வந்த பஜனையைக் கேட்டுக்கொண்டே உள்ளே போனேம். அனைவரும் ஆச்ரமத்தின் ஆலயத்தில் கூடி ஐக்கிய வணக்கம் செய்தோம். அது ராஜராஜேசுவரி அம்மன் கோவில். அம்பாள் மிகுந்த சோபையுடன் விளங்குகிருள். நாள்தோறும் நிகழும் நண்பகல் பூஜையை முறைப்படி செய்து முடித்தார்கள். பிறகு அந்நிலையத்தின் தலைவராகிய ஸ்ரீலஸ்ரீ திருச்சி சுவாமிகளைத் தரிசித்தோம். எங்களுடன் அவர் கள் அமர்ந்து பகல் போஜனம் செய்தார்கள். மிகுந்த அன்புடன் எங்கள் யாவருக்கும் பெரிய விருந்து வைத்தார்கள். அவர்களின் ஆச்ரமங் களில் எல்லாம் ஒவ்வொரு வேளையிலும் மிக வும் அன்புடன் உபசரித்தார்கள். உணவுக்குப் பிறகு திருச்சி சுவாமிகளிடமிருந்து விடை பெற்றுக்கொண்டு பிற்பகல் 3 மணிக்குப் புறப் பட்டோம். மாலை 5-30 மணிக்கு ஸ்ரீ ரங்கப் பட்டணம் வந்தடைந்தோம். பரதகண்டத் தின் ஏழு புண்ணிய நதிகளுள் ஒன்று காவேரி. அதற்குத் தக்ஷிண கங்கை என்றசிறப்புப் பெய ரும் உண்டு. இதனுள் மூன்று தீவுகள் இருக் கின்றன. அம்மூன்றும் அரங்கம் என்னும் பெயர் பெறுகின்றன. காவேரி இரண்டாகப் பிரிந்து சில மைல்களுக்குப் பிறகு மீண்டும் சேர்ந்து விடுகிறது. இடையில் இருக்கிற தீவு புனிதமானதாகக் கருதப்படுகிறது. இந்த ஸ்ரீரங்கப்பட்டணம் ஆதிரங்கம் எனப்படு கிறது. மத்தியில் இருப்பது சிவசமுத்திரம். அது மத்தியரங்கம் எனப்படுகிறது. ஸ்ரீரங்கம் அந்தரங்கம் எனப்படுகிறது. ஸ்ரீ மகாவிஷ்ணு பள்ளிகொண்டகோலத்தில் காட்சியளிக்கிருர். காவேரித்தாய் தான் புனிதமடைய வேண்டும், பயனுடையவள் ஆகவேண்டும் என்று இறைவ னிடம் பிரார்த்தித்தாள். இறைவன் அருள் கூர்ந்து அவளுக்குக் காட்சி கொடுத்து அவ ளது திருமேனியில் மூன்று இடங்களில் எழுந் தருளினர். அவைகள் அரங்கங்கள், பிரசித்த மான விஷ்ணு க்ஷேத்திரங்கள் ஆயின. தமிழ் நாட்டின் பண்பாடுகளில் பெரும்பகுதி காவேரி யின் இருகரைகளிலும் குடிகொண்டுள்ளது. நதிக்கரையும் இந்திய நாகரிகமும் இணைபிரி யாதவைகள். நரகாசுரன் ஸ்ரீ கிருஷ்ணனல் கொல்லப்பட்டபோது நான் கொல்லப்பட்ட தினம் மக்களுக்கு மங்களமான நாள் ஆகவேண்டும் என்று பிரார்த்தித்தான். அது தீபாவளி ஆயிற்று. அதுபோலக் காவேரித் தாய்—ஜடப்பொருள் ஒன்று பிரார்த்தித்தது என்று சொல்வதன் மூலம் நம்மைத் தூண்டி விடுகிருர்கள். நாம் என்ன பிரார்த்திப்பது ?

''பகவானே,என் உள்ளத்தில் நீ எழுந்தருள்வாயாக, என்னைப் புனிதப்படுத்துவாயாக, என் வாழ்வைப் பரோபகாரமானது ஆக்குவாயாக, நான் காவேரியின் உண்மையான புத்திரன் ஆவேனாக'' என்று பிரார்த்திக்கவேண்டும். பாரமார்த்திக சிந்தனைகளை நம் உள்ளத்தில் எழுப்புவதற்கே புராணங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இந்த இடத்திற்குக் கௌதம க்ஷேத்திரம் என்றும் பெயர். அவர் கோதாவரிக் கரையில் வாழ்ந்து வந்தார். அங்கு ஸ்ரீரங்கநாதரும் கோவில் கொண்டிருந்தார். ஒரு சமயம் அங்குப் பஞ்சம் வந்தது. ஆனால் கௌதமர் மட்டும் பஞ்சமில்லாமல் வந்தவர்களுக்கெல்லாம் உணவு அளித்துக் கொண்டிருந்தார். அதைப் பார்த்துப் பொறாமை கொண்ட மற்றவர்கள் கௌதமரின் பசுவை அடித்து விரட்டினர். அது இறந்துபோயிற்று. மனம் வருந்திய கௌதமர் தெற்கே வந்தார். ஸ்ரீரங்கப்பட்டணத்தில் தங்கினர். அது அவருக்கு மன ஆறுதலையும், திருப்தியையும் தந்தது. அவருடன் கூட கோதாவரிக் கரையிலிருந்த ஸ்ரீரங்கநாதப் பெருமானும் இங்கே வந்து விட்டார். 'ஓராதார் உள்ளத்து ஒளிக்கும் ஒளியானே, அன்பருக்கு அன்பனே' என்றபடி இறைவன் இருக்கிறான். ஆமை புகுந்த வீடும், அமீனா புகுந்த வீடும் உருப்படாது என்பார்கள். ஆமை என்பது பொறாமை. அவர்களை விட்டு இறைவன் போய் விடுவார். பக்தனோடு அவன் போகிற இடத்துக்குப் போய் விடுவார். இக்கதைகளையெல்லாம் எங்கள் ஐக்கிய வணக்கத்தின் முடிவில் ஆலய அர்ச்சகர் சொன்னர். வழிபாட்டை முடித்துக்கொண்டு ஆலயத்தை வலம் வந்து பஸ் ஏறினோம்.

மாலை ஏழு மணிக்குப் பிருந்தாவனம் போய்ச் சேர்ந்தோம். பிருந்தாவனம் கண்ணன் லீலைகள்புரிந்த இடம். கிருஷ்ண பக்தனது உள்ளத்துக்கு அது ரஞ்சிதமான பெயர். அப்பெயரைக் கேட்டாலே அவனுக்கு உடல் சிலிர்க்கிறது. ஆனந்தமான நினைவுகள் எழுகின்றன. ஆனால் இது அந்தப் பிருந்தாவனம் அன்று; செயற்கை பிருந்தாவனம். காவேரியைத் தடுத்து அங்கு அணை கட்டியுள்ளார்கள். அந்த அணையின் பின்புறம் அழகு அழகாகப் பூந்தோட்டங்களும், செயற்கை நீர் ஊற்றுகளும், நீர்வீழ்ச்சிகளும், விதவிதமான விளக்கு அலங்காரங்களும் அமைத்துள்ளார்கள். எல்லாம் பார்ப்பதற்கு மிக அழகாக இருக்கின்றன. கடவுளே கிருஷ்ணனுகப் பிறந்து பிருந்தாவனப் புழுதியில் ஓடியாடி விளையாடினன். அவன் பாத ஸ்பர்சத்தால் பூமிதேவி உள்ளம் பூரித்துப்போனள். அவன் குதித்து விளையாடி நீராடியதால் யமுனாதேவி ஆனந்தத்தால் வெகுவாகப் பிரவகித்தாள். அங்குத் தெய்வீக அழகு ஒளி வீசுகிறது. இங்கு விச்வேசுவரய்யா தன்னை மிகவும் பயன்படுத்தினரே என்று காவேரித்தாய் மகிழ்ந்து தேங்கி கிருஷ்ணராஜ சாகரம் என விளங்குகிருள். ஆரம்பப்பள்ளிப் பிள்ளைகள் மணி அடித்தவுடன் வீட்டிற்கு ஓடி வருவது போன்று சப்தமிட்டுக் கொண்டு எங்கும் நீர் பீறிட்டுக்கொண்டு பாய்கிறது. சிறுவயதுள்ள பிள்ளைகள், கோபாலர்களும் கோபிகளுமாக இங்கு ஏராளமானபேர் மிக்க மகிழ்ச்சியோடு நடமாடுகிருர்கள். எத்தனைவித உடை அலங்காரம்! பல மொழிகள் பேசும் மக்கள் முகத்தில் எவ்வளவு மகிழ்ச்சி பொங்க உலாவி வருகிருர்கள்! ஆம்! இதுவும் பிருந்தாவனம் தான். இவர்கள் யாவரும் கோபாலர்களும் கோபியர்களுமேயாவர். ஆனால் அந்த மாயக் கண்ணனே மாயைக்கு அதிபதி. அவன் உலகுக்குக் கண்ணேயாவான். அவனோடு சம்பந்தப்பட்டவர்களாகத் தங்களைக் கருதிக்கொள்ள இந்துக்கள் எப்பொழுதும் விரும்புவார்கள். காவேரியின் நீர்வளத்தால் ஆண்டு முழுவதும் அங்கு நீர்வளம் இருக்கும். இந்தப் பிருந்தாவனத்தின் அணையின் உதவியால் ஏராளமான விளைநிலங்கள் செழிப்படைகின்றன, அங்கு மின்சாரம் எடுக்கிருர்கள். அங்கு நீந்தல் குளம் ஒன்றும், படகுவிடும் ஏரி ஒன்றும் உள்ளன. நாங்கள் யாவரும் மிக்க மகிழ்ச்சியோடு யாவற்றையும் சுற்றிப் பார்த்துக்கொண்டு இரவு எட்டு மணிக்கு அங்கிருந்து புறப்பட்டோம். இரவு ஒன்பது மணிக்கு மைசூர் சாமுண்டிமலை அடிவாரத்தில் அமைந்துள்ள திருச்சி சுவாமிகளின் சாந்தாஸ்ரமத்துக்குப் போய்ச் சேர்ந்தோம். அங்கு ஆலயத்தில் ஐக்கிய வணக்கம் செய்து இரவு உணவு எடுத்துக்கொண்டு தூங்கினோம். அங்குள்ள சாது மிகவும் அன்புடன் அனைவரையும் உபசரித்தார். (தொடரும்)

# பொங்குக புண்ணியப் பொங்கல்

( புலவர் க. தில்லைக்கோவிந்தன் )

பொங்குக புண்ணியப் பொங்கலம்மா ! — எங்கும்
பொங்குக மங்கலம் பொங்குகவே !
தங்கும் இயற்கையின் சட்டமம்மா ! — இங்குத்
தண்ணளி நற்பணி பொங்குகவே ! (பொங்குக!)

பூதமோர் ஐந்தும் தொழிலாற்றும் — நல்ல
போதனை ஓங்கிடப் பொங்குகவே !
மேதகு செஞ்சுடர்ச் செல்வனெனும் — வல்ல
மேலவன் சீர்பெறப் பொங்குகவே ! (பொங்குக!)

மக்கள் உளம்புக வாழ்வதுவே — பெற்ற
மாண்புகழ் ஆமெனப் பொங்குகவே !
மிக்குயர் நான்மறை நூன்முதலா — உற்ற
மெய்ப்பொருள் கண்டிடப் பொங்குகவே! (பொங்குக!)

போக்கு வரவுடைப் பூவுலகில் — சீவ
போதம் கரைந்திடப் பொங்குகவே !
காக்கும் பரம்பொருள் ஞானமணம் — மேவக்
கைக்கொளும் நல்லறம் பொங்குகவே! (பொங்குக!)

திருவைந் தெழுத்தாம் சிவாயநம — எண்ணிச்
சித்தம் பழுத்திடப் பொங்குகவே !
அருவை உருவை அருவுருவை — நண்ணி
ஆனந்தம் சார்ந்திடப் பொங்குகவே! (பொங்குக!)

தேன்மலர் ஆன்பால் செங்கரும்பு — மஞ்சள்
தீங்கனிச் சுவைவளம் பொங்குகவே !
மான்மழு ஏந்திய மங்கைபங்கன் — நெஞ்சில்
மாநடம் ஆடிடப் பொங்குகவே ! (பொங்குக !)

சற்குரு நாதர் பரமஹம்சர் — தந்த
சமய சமரசம் பொங்குகவே!
முற்படு மூலச் சுடரறிவாய் — வந்த
முன்னோன் அருள்பெறப் பொங்குகவே! (பொங்குக!)

அன்னைநம் சாரதை அன்புருவம் — நம்மை
ஆட்கொளும் சக்தியாய்ப் பொங்குகவே!
பின்னை வினையின் பிறப்பறுப்பார் — அம்மை
பேரருள் வாழ்கெனப் பொங்குகவே! (பொங்குக!)

தாய்மதம் ஆகிய இந்துமதம் — காத்த
தவமகன் ஆற்றலே பொங்குகவே!
ஆய்முறை யாவும் அவன்வடிவே — ஏத்தும்
ஆன்மிகத் தத்துவம் பொங்குகவே! (பொங்குக!)

மூவர் அருண்மறை மூவுலகும் — செல்ல
முக்குணச் சிக்கறப் பொங்குகவே!
பாவனை கூடிய சாதனையே — வெல்ல
பாரகம் ஓம்சிவ பொங்குகவே! (பொங்குக!)

---

# செய்திகள்

**நிகழ்பவை**

ஜனவரி மாதம் 21ஆம் தேதி தென் ஆற்காடு ஜில்லா கடலூரில் உள்ள ஷண்முகானந்த சபையில் மாலை 6-30 மணியிலிருந்து 9 மணி வரை **ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகள்** அந்தர்யோகம் நடாத்துவார்கள்.

ஜனவரி மாதம் 24ஆம் தேதி செவ்வாய்க் கிழமையன்று பொங்கல் விடுமுறைக்குப் பின் ஸ்ரீ விவேகானந்த வித்யாவனக் குருகுலப் பள்ளி திறக்கப்படுகிறது.

ஜனவரி 31ஆம் தேதி செவ்வாய்க்கிழமை யன்று ஸ்ரீ விவேகானந்தர் ஜயந்தி ஆகும். அன்று குருகுல மாணவர்கள் 24 மணி நேரம் அகண்ட நாம பஜனையும், நண்பகல் 1 மணி நேரம் ஐக்கிய வணக்கமும் செய்வார்கள்.

6-2-78 திங்கட்கிழமையன்று வட ஆற்காடு ஜில்லா ஆரணி ஸ்ரீ சுப்பிரமணிய சாஸ்திரியார் உயர்நிலைப்பள்ளியிலும், அரசினர் ஆண்கள் உயர்நிலைப்பள்ளியிலும், அரசினர் பெண்கள் உயர்நிலைப்பள்ளியிலும் **ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகள்** அறவுரை நிகழ்த்துவார்கள்.

---

# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
## இயற்றிய நூல்கள்

| | |
|---|---|
| திருவாசகம்-மூன்றும் பதிப்பு பிரசார விலை | ரூ. 14-00 |
| ஸ்ரீமத் பகவத்கிதை-பனிரெண்டாம் பதிப்பு பிரசார விலை | ... 12-00 |
| ஞானயோக விளக்கம் | ... 8-00 |
| ராஜயோக விளக்கம் | ... 8-00 |
| கர்மயோக விளக்கம் | ... 7-00 |
| பக்தியோக விளக்கம் | ... 6-00 |
| பரமஹம்சரின் பெருமை | ... 6-00 |
| விவேகானந்த விவரணம் | ... 4-00 |
| ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் | ... 4-00 |
| விவேகானந்த உபநிஷதம் | ... 4-00 |
| கடவுளின் வடிவங்கள் | ... 4-00 |
| சந்தேகம் தெளிதல் பாகம்-I | ... 3-50 |
| சந்தேகம் தெளிதல் பாகம்-II | ... 3-50 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேச மஞ்ஜரீ ஆறும் பதிப்பு-பிரசார விலை | ... 2-75 |
| தினசரி தியானம்-பதினான்காம் பதிப்பு (பிளாஸ்டிக் உறையுடன்) பிரசாரவிலை | ... 2-75 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் சரிதம் | ... 2-00 |
| தேவரகசியம் (முதலிய கதைகள்) | ... 2-00 |
| ஸ்ரீ சாரதா தேவியாரது சரிதம் | ... 2-00 |
| கண்ணன் என்னும் கடவுள் | ... 2-00 |
| **தாயுமானவர் இயற்றிய** | |
| பரிபூரணானந்தம் விரிவுரை | ... 3-00 |
| கருணாகரக்கடவுள் ஷை | ... 2-00 |
| மௌனகுரு வணக்கம் ஷை | ... 1-50 |
| பரசிவ வணக்கம் ஷை | ... 0-50 |
| விரதவீரர் பீஷ்மர் (நாடகம்) | ... 1-50 |
| பஜனைப் பாடல்கள் | ... 1-50 |
| சந்நியாசி | ... 1-25 |
| குழந்தைகளின் களிக்கூடம் | ... 1-00 |
| இராவண தத்துவம் | ... 1-00 |
| சகோதரி நிவேதிதை | ... 1-00 |
| ஹரிச்சந்திரன் (நாடகம்) | ... 1-00 |
| காயத்ரீ | ... 1-00 |
| வாலிமோக்ஷம் (நாடகம்) | ... 1-00 |
| தவப்புதல்வர்கள் (நாடகம்) | ... 1-00 |
| அறம் வளர்த்த நம்பி | ... 0-95 |
| நோய்க்கு இடம் கொடேல் | ... 0-80 |
| நன்மக்களைப் பெறுதல் | ... 0-80 |
| தானவீரன் கர்ணன் (நாடகம்) | ... 0-80 |
| பாண்டவ கௌரவ பெருமை (நாடகம்) | ரூ. 0-80 |

| | |
|---|---|
| பாதுகா பட்டாபிஷேகம் (நாடகம்) | ... 0-75 |
| இறை வணக்கம் | ... 0-75 |
| *ஆத்ம சக்தி | ... 0-75 |
| செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா? | ... 0-75 |
| *மனிதனது நிஜசொரூபம் | ... 0-70 |
| *சக்தி தத்துவம் | ... 0-70 |
| *சிவ தத்துவம் | ... 0-70 |
| பிரஹ்லாதன் (நாடகம்) | ... 0-65 |
| பார்வதி, லக்ஷ்மி, சரஸ்வதி கர்வபங்கம் | ... 0-65 |
| *ஈசன் எங்கும் நிறைந்துள்ளான் | ... 0-60 |
| இந்து மதமும் கிறிஸ்துவ மதமும் | ... 0-60 |
| *ஆலய வழிபாடு | ... 0-60 |
| சைவன் யார்? | ... 0-50 |
| *சூரிய நாராயணன் | ... 0-50 |
| *முருகக் கடவுள் | ... 0-50 |
| *விஷ்ணு தத்துவம் | ... 0-50 |
| தெய்வீக மகிமைகள் | ... 0-50 |
| கர்மகாண்டம் எது? ஞானகாண்டம் எது? | ... 0-50 |
| மார்க்கண்டேயன் (நாடகம்) | ... 0-40 |
| தபோபலன் (நாடகம்) | ... 0-40 |
| *கணபதி | ... 0-40 |
| நன்னெறிகளும் அருள்வாக்குகளும் | ... 0-40 |
| அருள் விருந்து 1 to 25 ஒவ்வொன்றும் | ... 0-30 |
| பரசுராமர் கர்வ பங்கம் (நாடகம்) | ... 0-15 |
| The Bhagavad Gita (8th Imp.) | ... 15-00 |
| The Indian National Education | ... 8-00 |
| Sri Lalithambika Sahasranama Stotram | ... 8-00 |
| Ramakrishna Lives Vedanta | ... 8-00 |
| Facets of Brahman or The Hindu Gods | ... 5-00 |
| Daily Divine Digest (with plastic-cover) | ... 4-50 |
| Mahabharata (with plastic cover) | ... 4-50 |
| Ramayana (do) | ... 4-00 |
| The Man Making Message of Vivekananda (with plastic cover) | ... 3-00 |
| The Bhagavad Gita (Small Size) (With plastic cover) | ... 3-00 |
| Sri Vishnu Sahasranama Stotram | ... 2-50 |
| Holy Bible—In the Light of Vedanta | ... 1-50 |
| *Introducing the Gita | ... 1-50 |
| *Key to Higher Life | ... 0-75 |
| *The Teacher | ... 0-60 |
| *The Student | ... 0-45 |

தேவையான புத்தகங்களுக்கு உரிய விலையுடன் தபால் கட்டணத்திற்காக ஸ்ரீமத் பகவத்கீதைக்கு ரூ. 3-00ம் மஞ்ஜரீக்கு ரூ. 2-40ம் தினசரி தியானத்திற்கு ரூ. 2-20ம் மற்ற வெளியீடுகளுக்கு ரூ. 2-50 முதல் 3-50 வரை சேர்த்து அனுப்புங்கள்.

*இக்குறியிட்ட புத்தகங்கள் ஏனைய பெரிய புத்தகங்களில் அடங்கியுள்ளன.

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம், திருப்பராய்த்துறை–639 115, திருச்சி Dt.

# திருவாசகம்

விளக்கியவர்

ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர்



பதவுரை—கருத்துரை—விளக்கமான விரிவுரையுடன், ஏற்ற இடங்களில் உபநிஷத் மந்த்ரங்களும் இணைக்கப்பெற்றிருக்கின்றன.

எல்லோரும் அறிந்துகொள்ளக்கூடிய இனிய தமிழ்நடை. டெம்மி 1க்கு 8ல் 993 பக்கங்களையுடையது. உயர்ந்த தடிப்பான இந்தியன் பிரிண்டிங் கிளேஸ் காகிதம்—சுத்தமான பதிப்பு—அழகிய பிளாஸ்டிக் காலிகோ பைண்டு. ரூ. 20-00 மதிப்புள்ள இப்புத்தகம் பிரசார நோக்கத்தைக்கொண்டு மிக மிகக் குறைந்த

**விலை ரூ. 14-00க்கு விற்கப்படுகிறது.**

( தபால் செலவு ரூ. 3-00 )

**ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்**

திருப்பராய்த்துறை-639 115 திருச்சி ஜில்லா

Edited by SWAMI NITHYANANDA,

Printed & Published by Swami Yogananda at Tapovanam Printing School, Tirupparaitturai, Tiruchi Dt.